بسم الله الرحمن الرحيم

# ஜின்களும் ஷைத்தான்களும்

## பொருள் அட்டவணை

**ஷைத்தான்களைப் பற்றிய விபரங்கள்**

2. ஷைத்தானின் உருவ அமைப்பு
3. ஷைத்தான் நெருப்பால் படைக்கப்பட்டவன்
4. ஷைத்தானின் உணவு
5. ஷைத்தான் அருந்தும் பானம்
6. ஷைத்தானின் இருப்பிடம்
7. இறைக் கட்டளையை மறுத்தான்
8. பெருமையின் காரணத்தால் வழிகெட்டான்
9. வானவர்களின் கூட்டத்திலிருந்து வெளியேற்றப்பட்டான்
10. அவகாசம் அளிக்கப்பட்டான்
11. ஷைத்தானின் சபதம்
12. முதன் முதலில் ஷைத்தான் வலையில் விழுந்தவர்கள்
13. மனிதர்களின் விரோதி
14. நபிமார்களுக்கு விரோதி
15. கெட்ட தோழன்
16. ஷைத்தானின் நண்பர்கள்
17. ஒவ்வொருவருடனும் இருக்கிறான்
18. உடலில் இரண்டரக் கலந்துள்ளான்
19. ஷைத்தானை விரட்டும் பெயரில் பித்தலாட்டம்
20. அனைவரிடமிருந்தும் ஷைத்தானை விரட்டுவார்களா?
21. தீய எண்ணங்களை ஏற்படுத்துவான்
22. ஜின்களும் ஷைத்தான்களும் ஒன்றா?
23. கெட்ட ஜின்களும் ஷைத்தான்களும் ஒன்றா?
24. ஷைத்தான் உருமாறுவானா?
25. மனிதனாக உருமாறுவானா?
26. மனித ஷைத்தான்கள்.
27. நாய் வடிவில் வருவானா?
28. பாம்பு வடிவில் வருவானா?
29. பூனை வடிவில் வருவானா?

## ஷைத்தானின் சூழ்ச்சிகள்

1. தீயவற்றை அலங்கரித்துக்காட்டுவான்
2. தீய காரியங்களை செய்யுமாறு ஏவுவான்
3. தீய எண்ணங்களைத் தோற்றுவிப்பான்
4. இறைமறுப்பாளர்களாக்க முயற்சிப்பான்
5. இறைநினைவை மறக்கடிக்க முயலுவான்
6. உறுதியாக இருந்தால் அஞ்சுவான்
7. தன்னை பின்பற்றியவர்களை ஏமாற்றுவான்
8. இறுதியில் நரகம் செல்வான்

## காத்துக்கொள்ளும் வழிமுறைகள்

1. சிறந்த பாதுகாவலன்
2. இறைவனிடம் கையேந்துங்கள்
3. குர்ஆனை ஓதும் போது....
4. கழிவறைக்குள் நுழையும் போது...
5. உடலுறவு கொள்ளும் போது...
6. காலையிலும் மாலையிலும்
7. ஃபஜர் தொழுத பிறகு....
8. உறங்கச் செல்லும் முன்....
9. கெட்ட கனவுகள் ஏற்படும் போது....
10. ஓரிடத்தில் தங்கும் போது...
11. பள்ளிக்குள் நுழையும் போது
12. பள்ளியிலிருந்து வெளியேறும் போது....
13. தொழுகையில் குழப்பம் ஏற்பட்டால்....
14. கோபம் ஏற்பட்டால்....
15. கழுதையின் சப்தத்தை கேட்டால்..
16. குழந்தைக்காகப் பாதுகாப்புத் தேட வேண்டும்
17. தகடு தாயத்துகளைத் தொங்கவிடுவது இணைவைப்பாகும்
18. மார்க்கம் காட்டித்தராத முறையில் ஓதிப்பார்க்கக் கூடாது
19. சூரத்துல் பாத்திஹாவை வைத்து ஓதிப் பார்க்கலாம்.

20. 112, 113, 114 ஆகிய அத்தியாயங்களை ஓதி ஊதலாம்
21. நபியவர்கள் கற்றுக்கொடுத்த பிரார்த்தனைகளை வைத்து...
22. குழந்தைகளை வெளியில் விடக்கூடாத நேரம்
23. இறைவனை அதிகம் நினைக்க வேண்டும்
24. இறைத்தூதர் கற்றுத்தந்தவாறு நினைக்க வேண்டும்
25. நற்குணங்களை வளர்த்துக்கொள்ள வேண்டும்
26. ஃபஜர் தொழுக வேண்டும்
27. குர்ஆன் ஓத வேண்டும்
28. சஜ்தாவை அதிகப்படுத்த வேண்டும்
29. தொழும் போது வேறு காரியங்களில் ஈடுபடக்கூடாது
30. தொழும் போது யாரையும் குறுக்கே செல்லவிடக் கூடாது
31. ஸஃப்பை நெருக்கமாக்கிக்கொள்ள வேண்டும்

## முன்னுரை

இஸ்லாம் மனிதனை சீர்படுத்தி நல்வழியில் கொண்டு செல்லும் இறைவனின் மார்க்கமாகும். இந்த சீரிய மாற்றத்திற்கு இஸ்லாமிய மார்க்கத்தின் கொள்கையும் அதன் கோட்பாடுகளுமே காரணமாகும். இஸ்லாமிய சட்டங்களும் கொள்கை கோட்பாடுகளும் இறைவன் புறத்திலிருந்து மனிதனுக்கு வழங்கப்பட்டவை ஆகும்.

இஸ்லாமிய போதனைகளில் சில மறைவான விசயங்களை நம்புவதும் மிக முக்கியமான ஒன்றாகும். நாத்திகர்கள் பார்வையில் இவை மூடநம்பிக்கைகளாக அவர்களுக்குத் தெரிந்தாலும் இவற்றை நம்புவதின் மூலமே மனித சமுதாயம் நல்ல மாற்றத்தை அடைந்து இவ்வுலகிலும் மறுவுலகிலும் வெற்ற பெற முடியும்.

இத்தகைய மறைமுகமான நம்பிக்கைகளில் ஒன்றான ஜின்களைப் பற்றி விரிவாக இந்நூலில் அறிய இருக்கின்றோம். ஜின்களும் ஷைத்தான்களும் மனிதக் கண்களுக்குப் புலப்படாத மறைமுகமான படைப்பாகும். இவர்களைப் பற்றி நம்முடைய சுய அறிவைக் கொண்டு ஆராய்ந்து கூற இயலாது. அப்படிக்கூறினால் நிச்சயமாக அது வழிகேட்டில் தான் கொண்டு போய்விடும்.

மனித அறிவிற்குப் புலப்படாத விஷயங்களை அறிந்துகொள்வதாக இருந்தால் குர்ஆன் மற்றும் ஹதீஸ்களின் மூலமே அறிந்துகொள்ள முடியும். இவ்விரண்டையும் தவிர்த்து வேறு எதன் மூலமும் யார் மூலமும் இது தொடர்பான விஷயங்களை அறிந்துகொள்ள இயலாது.

ஜின்களையும் ஷைத்தான்களையும் பற்றி குர்ஆனும் ஹதீஸ்களும் தெளிவாக விளக்குகிறது. இந்த விளக்கங்களை அறிந்து கொண்டால் தவறான நம்பிக்கைகளில் நம் சமூகம் நிச்சயம் விழாது. உலக மக்களின் எதிரியான ஷைத்தானைப் பற்றி விபரமாக அறிந்து அவனது சதி வலையில் விழாமல் நம்மை நாம் காத்துக்கொண்டால் இறைவனுடைய கோபம் நம்மீது ஏற்படாது.

மக்கள் இவைகளை அறிந்து நல்வழியில் செல்வதற்காக குர்ஆனையும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களையும் அடிப்படையாகக் கொண்டு ஜின்களையும் ஷைத்தான்களையும் பற்றி விவரிக்கும் இப்புத்தகம் தொகுக்கப்பட்டுள்ளது. இதில் தவறுகள் ஏதும் இருந்தால் சுட்டிக்காட்டுங்கள். திருத்திக்கொள்கிறோம்.

**இப்படிக்கு**

**s . அப்பாஸ் அலீ m.i.s.c**

### ஜின் என்ற வார்த்தையின் பொருள்

அல்ஜின்னு என்ற அரபு வார்த்தை குர்ஆனிலும் ஹதீஸ்களிலும் பரவலாக பயன்படுத்தப்பட்டுள்ளது. ஜின்கள் என்பது மனிதர்களைப் போன்று பகுத்தறிவு வழங்கப்பட்டு இறைக்கோட்பாடுகளை கடைபிடிக்குமாறு வலியுறுத்தப்பட்ட உயிரினமாகும்.

மனிதர்களுக்கும் ஜின்களுக்கும் பல ஒற்றுமைகள் இருப்பது போல் சில வேற்றுமைகளும் உள்ளது. மனிதர்களை நம் கண்களால் காண முடியும். ஆனால் ஜின்களை மனிதக் கண்களால் காண முடியாது. மாறாக ஜின்களால் மனிதர்களை காணமுடியும்.

ஜன்ன என்ற வினைச் சொல்லிலிருந்து ஜின் என்ற வார்த்தை பிரிந்து வந்துள்ளது. மறைத்தல் மறைதல் என்பது இதன் நேரடிப் பொருளாகும். திருமறைக் குர்ஆனில் ஜன்ன என்ற வார்த்தை மூடுதல் என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இரவு அவரை மூடிக் கொண்ட போது ஒரு நட்சத்திரத்தைக் கண்டு "இதுவே என் இறைவன்" எனக் கூறினார். அது மறைந்த போது "மறைபவற்றை நான் விரும்ப மாட்டேன்" என்றார்.

**அல்குர்ஆன் (6 : 76)**

எதிரிகளின் தாக்குதல்களிலிருந்து தன்னை மறைத்துக் கொள்வதற்கு கேடயம் உதவுவதால் கேடயத்திற்கு ஜுன்னத் என்று சொல்லப்படுகிறது. தாயின் வயிற்றில் உள்ளக் குழந்தை மறைவாக இருப்பதால் அதற்கு ஜனீன் என்று கூறப்படுகிறது.

பாம்புகள் மனிதக் கண்களை விட்டு விரைவில் மறைந்துவிடுவதால் பாம்புகளுக்கு ஜான் என்று கூறப்படுகிறது. ஜின்கள் மனிதக்கண்களுக்கு புலப்படாமல் மறைந்து இருப்பதால் இதற்கு ஜின் என்று கூறப்படுகிறது.

**நூல் : லிஸானுல் அரப் பாகம் : 13 பக்கம் : 92**

## ஜின்கள் இருப்பது உண்மை

ஜின் என்ற ஒரு படைப்பு உலகத்தில் இருப்பதாக திருக்குர்ஆனும் நபிமொழிகளும் தெளிவாக கூறுகிறது. ஒவ்வொரு முஸ்லிமும் நம்பிக்கைக்கொள்ள வேண்டிய மறைவான விஷயங்களிலும் இதுவும் ஒன்றாகும்.

வானவர்கள் சொர்க்கம் நரகம் இவற்றை நாம் யாரும் கண்களால் பார்த்துவிட்டு நம்பவில்லை. மாறாக குர்ஆனும் ஹதீஸ்களும் இவற்றை நம்புமாறு கூறுவதால் நம்புகிறோம். இது போன்று ஜின்களை நம் கண்களால் காணாவிட்டாலும் மறைவான நம்பிக்கை என்ற அடிப்படையில் ஜின்கள் இருப்பதாக நம்புபவரே உண்மையான இறைநம்பிக்கையாளராக இருக்க முடியும்.

இதுவரை மனிதனுடைய அறிவுக்குப் புலப்படாமல் உள்ள பல விஷயங்களில் இதுவும் ஒன்று என்று கருதுவதே ஈமானிற்கு உகந்தது. சில வழிகெட்ட கூட்டங்கள் ஜின்கள் என்று ஒரு படைப்பே இல்லை என்று கூறி மக்களை வழிகெடுத்துக்கொண்டிருக்கிறது. ஜின்கள் தொடர்பாக இந்நூலில் குறிப்பிடப்படும் ஒவ்வொரு ஆதாரமும் இவர்களின் தவறான நம்பிக்கையை தகர்க்கக்கூடியதாக இருக்கிறது.

## மனிதர்களுக்கு முன்னால் உருவாக்கப்பட்ட படைப்பு

மனித குலம் அனைத்திற்கும் தந்தையும் முதல் மனிதருமான ஆதம் (அலை) அவர்களை படைப்பதற்கு முன்பே ஜின்களை அல்லாஹ் படைத்துவிட்டதாக திருக்குர்ஆன் கூறுகிறது.

சேற்றிலிருந்த கருப்புக் களிமண்ணால் வடிவமைக்கப்பட்டு மனிதனைப் படைத்தோம். கடுமையான வெப்பமுடைய நெருப்பால் இதற்கு முன் ஜின்னைப் படைத்தோம்.

**அல்குர்ஆன்(15 : 27)**

**நெருப்பால் படைக்கப்பட்டவர்கள்**

மனிதர்கள் மண்ணிலிருந்து படைக்கப்பட்டிருப்பது போல் ஜின்கள் நெருப்பிலிருந்து படைக்கப்பட்டுள்ளனர். ஜின்கள் நெருப்பிலிருந்து படைக்கப்பட்டதால் அவர்களின் உடலில் நெருப்பு பற்றிக்கொண்டிருக்கும் என்று விளங்கக்கூடாது.

மனிதன் மண்ணால் படைக்கப்பட்டாலும் தற்போது மனிதர்கள் மண் வடிவத்தில் இல்லை. மனிதனின் தோற்றமும் தன்மைகளும் மண்ணுடைய தோற்றத்திற்கும் தன்மைகளுக்கும் முற்றிலும் வேறுபட்டிருக்கிறது. இது போன்றே நெருப்பிற்கும் ஜின்களுக்கும் மத்தியில் தோற்றத்திலும் தன்மையிலும் வித்தியாசம் இருக்கலாம்.

கடுமையான வெப்பமுடைய நெருப்பால் இதற்கு முன் ஜின்னைப் படைத்தோம்.

**அல்குர்ஆன் (15 : 27)**

தீப்பிழம்பிலிருந்து ஜின்னைப் படைத்தான்.

**அல்குர்ஆன் (55 : 15)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : வானவர்கள் ஒளியால் படைக்கப்பட்டனர். ‘ஜின்’கள் தீப்பிழம்பால் படைக்கப்பட்டனர். (ஆதி மனிதர்) ஆதம், உங்களுக்கு (குர்ஆனில்) கூறப்பட்டுள்ளதைப் போன்று (களிமண்ணால்) படைக்கப்பட்டார்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (5722)**

### பகுத்தறிவு வழங்கப்பட்டவர்கள்

ஜின்கள் என்பவர்கள் ஆடுமாடுகளைப் போன்று பகுத்தறிவற்ற உயிரினமில்லை. மாறாக மனிதர்களைப் போலவே பகுத்தறிவு வழங்கப்பட்டவர்கள். மனிதர்களைப் போலவே சொர்க்கம் நரகத்தை அடையக்கூடியவர்கள். சிந்தித்து நல்வழியை தேர்வு செய்யுமாறு வலியுறுத்தப்பட்டவர்கள்.

ஜின்களிலும், மனிதர்களிலும் நரகத்திற்காகவே பலரைப் படைத்துள்ளோம். அவர்களுக்கு உள்ளங்கள் உள்ளன. அவற்றின் மூலம் அவர்கள் புரிந்து கொள்வதில்லை. அவர்களுக்குக் கண்கள் உள்ளன. அவற்றின் மூலம் அவர்கள் பார்ப்பதில்லை. அவர்களுக்குக் காதுகள் உள்ளன. அவற்றின் மூலம் அவர்கள் கேட்பதில்லை. அவர்கள் கால்நடைகளைப் போன்றோர். இல்லை! அதை விடவும் வழி கெட்டவர்கள். அவர்களே அலட்சியம் செய்தவர்கள்.

**அல்குர்ஆன் (7 : 179)**

### ஜின்களும் பேய்களும் ஒன்றா?

பேய்களுக்கும் கெட்ட ஆவிகளுக்கும் ஜின்கள் என்று சொல்லப்படுவதாக சிலர் தவறான கருத்தை கூறி வருகிறார்கள். இக்கருத்து இஸ்லாத்திற்கு முற்றிலும் புறம்பானதாகும்.

ஆங்காங்கே சுற்றிக்கொண்டிருக்கும் இறந்து போனவர்களின் ஆவிகள் தான் பேய்கள் என்று பேய்நம்பிக்கை உள்ளவர்கள் கருதுகிறார்கள். இந்த நம்பிக்கையை குர்ஆனும் ஹதீஸ்களும் பொய்யென நிராகரிக்கிறது.

இறந்தவர் நல்லவராக இருந்தாலும் தீயவராக இருந்தாலும் அவரின் உயிர் அல்லாஹ்வின் பிடியில் இருக்கிறது. அவனது கடுமையான பிடியிலிருந்து ஆவிகள் தப்பித்து வரவே முடியாது என்று திருக்குர்ஆன் கூறும் போது ஆவிகள் பூமியில் சுற்றித்திரிகிறது என நம்புவது குர்ஆனிற்கு எதிரானதும் மூடநம்பிக்கையுமாகும். எனவே பேய்கள் இருப்பதாக நம்பக்கூடாது.

உயிர்களை அவை மரணிக்கும் நேரத்திலும், மரணிக்காதவற்றை அவற்றின் உறக்கத்திலும் அல்லாஹ் கைப்பற்றுகிறான். எதற்கு மரணத்தை விதித்து விட்டானோ அதைத் தனது கைவசத்தில் வைத்துக் கொண்டு மற்றதை குறிப்பிட்ட காலம் வரை விட்டு விடுகிறான். சிந்திக்கிற மக்களுக்கு இதில் பல சான்றுகள் உள்ளன.

**அல்குர்ஆன் (39 : 42)**

பேய் நம்பிக்கை பொய்யானது என்பதை விரிவாக விளக்கும் வகையில் பேய் பிசாசு என்ற தலைப்பில் தனி புத்தகம் வெளியிடப்பட்டுள்ளது. கூடுதல் விபரம் அறிய அதை வாங்கி படித்துக்கொள்ளுங்கள்.

பேய்கள் என்று எதுவும் பூமியில் இல்லை. பேய் நம்பிக்கை என்பது இல்லாத ஒன்றை இருப்பதாக நம்புவதாகும். ஆனால் ஜின்களை நம்புவது பேய்களை நம்புவது போன்றதல்ல.

ஜின்கள் என்று ஒரு கூட்டம் தற்போதும் பூமியில் வாழ்ந்து வருவதாக குர்ஆனும் ஹதீஸ்களும் கூறுகிறது. ஜின்களை மறுத்தால் குர்ஆனையும் ஹதீஸ்களை மறுத்ததாகிவிடும். எனவே ஒவ்வொருவரும் ஜின்கள் இருப்பதாக அவசியம் நம்பியாக வேண்டும்.

பேய் நம்பிக்கைக்கும் ஜின் நம்பிக்கைக்கும் உள்ள இந்த வித்தியாசத்தை விளங்கிக் கொண்டால் இரண்டும் ஒன்று என்று சாதாரண அறிவு படைத்தவர் கூட கூறமாட்டார்.

**ஜின்களின் வகைகள்**

ஜின்களின் உடல் உறுப்புக்கள் மற்றும் தோற்றம் குறித்து விரிவான தகவல் ஹதீஸ்களில் கிடைக்கப்பெறவில்லை. காற்றில் பறந்து செல்பவர்கள் பூமியில் தங்கி வாழ்பவர்கள் நாய் மற்றும் பாம்பு வடிவில் திரிபவர்கள் இவ்வாறு மூன்று வகையினர் இருப்பதாக ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஜின்களில் மூன்று வகையினர் இருக்கிறார்கள். இவர்களில் ஒரு வகையினருக்கு இறக்கைகள் உண்டு. இவர்கள் காற்றில் பறந்து செல்வார்கள். நாய்களும் பாம்புகளும் இன்னொரு வகையினராகும். இன்னொரு வகையினர் (ஆங்காங்கே) தங்கிக்கொண்டும் (வேறு இடங்களுக்கு) பயனித்துக்கொண்டும் இருப்பார்கள்.

**அறிவிப்பவர் : அபூ சஃலபா (ரலி)**

**நூல் : முஷ்கிலுல் ஆஸார் (2473)**

பாம்வு வடிவிலும் நாய் வடிவிலும் சில ஜின்கள் இருக்கிறார்கள் என்று மேலுள்ள ஹதீஸ் கூறுகிறது. இன்றைக்கு உள்ள எல்லா நாய்களும் பாம்புகளும் ஜின்கள் தான் என்று புரிந்து விடக்கூடாது. இவ்வாறு புரிவதற்கு எந்த ஆதாரமும் இல்லை.

பாம்புகளிலும் நாய்களிலும் ஜின்களாக இருப்பவையும் உண்டு. ஜின்களாக இல்லாதவையும் உண்டு என்று கூறுவதே ஏற்புடையதாகும். பாம்புகளில் இவ்வாறு இரு வகை இருப்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள். இதை பின்வரும் ஹதீஸிலிருந்து அறியலாம்.

**பாம்பு வடிவில் ஜின்கள்**

நான் (ஒரு முறை) ஒரு பாம்பைக் கொல்வதற்காக விரட்டிச் சென்று கொண்டிருந்த போது அபூ லுபாபா (ரலி) அவர்கள் என்னைக் கூப்பிட்டு, “அதைக் கொல்லாதீர்கள்” என்று சொன்னார்கள். நான், “அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பாம்புகளைக் கொல்லும்படி உத்திரவிட்டுள்ளார்கள்” என்று சொன்னேன். அதற்கு அவர்கள், “(ஆமாம், உண்மை தான்.) ஆனால், அதன் பிறகு வீடுகளில் வசிக்கும் பாம்புகளை (பார்த்த உடனே) கொல்லவேண்டாமென்று அவர்கள் தடுத்தார்கள். அவை வீட்டில் வசிக்கும் ஜின்களாகும்” என்று பதிலளித்தார்கள்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)**

**நூல் : புகாரி (3298)**

வீட்டில் வசிக்கும் பாம்புகளை மட்டுமே நபி (ஸல்) அவர்கள் ஜின்கள் என்று குறிப்பிட்டுள்ளார்கள். இதிலிருந்து வீட்டிற்கு வெளியே சுற்றித்திரியும் பாம்புகள் ஜின்கள் இல்லை என்பதும் அவற்றை கொல்ல வேண்டும் என்பதும் தெளிவாகிறது.

வீடுகளில் தென்படுகின்ற பாம்புகள் அனைத்தும் ஜின்கள் தான் என்று விளங்கவிடக்கூடாது. பாம்புகளை வீட்டில் காணும் போது அவை வெளியேறுவதற்காக மூன்று நாட்கள் பொறுத்திருக்க வேண்டும். வெளியேறாவிட்டால் அவற்றை கொல்ல வேண்டும் என்று ஹதீஸில் உள்ளது.

ஹிஷாம் பின் ஸுஹ்ரா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் : நான் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களது இல்லத்திற்குச் சென்றேன். அப்போது அவர்கள் தொழுதுகொண்டிருப்பதைக் கண்டேன். ஆகவே, அவர்கள் தொழுகையை முடிக்கும்வரை அவர்களை எதிர்பார்த்துக் காத்திருந்தேன். அப்போது வீட்டின் மூலையிலிருந்த பேரீச்சமர காய்ந்த குச்சிகளுக்கு இடையிருந்து ஏதோ அசையும் சப்தத்தை நான் கேட்டேன். உடனே நான் திரும்பிப் பார்த்தேன். அங்கே ஒரு பாம்பு இருந்தது. அதைக் கொல்வதற்காக நான் துள்ளிக் குதித்து எழுந்தேன்.

உடனே அபூசயீத் (ரலி) அவர்கள் அமருமாறு எனக்குச் சைகை செய்தார்கள். ஆகவே, நான் அமர்ந்துகொண்டேன். அவர்கள் தொழுகையை முடித்துத் திரும்பியபின் அவ்வீட்டிலிருந்த ஓர் அறையை எனக்குச் சுட்டிக்காட்டி, “இந்த அறையை நீர் காண்கிறீரா?” என்று கேட்டார்கள். நான் ‘ஆம்’ என்றேன். அப்போது அபூசயீத் (ரலி) அவர்கள் கூறினார்கள்:

இந்த அறையில் புதிதாகத் திருமணமான எங்கள் இளைஞர் ஒருவர் இருந்தார். நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அகழ்ப்போருக்குப் புறப்பட்டுச் சென்றபோது, அந்த இளைஞர் நண்பகல் நேரங்களில் தம் வீட்டாரிடம் திரும்பிச் செல்ல அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டுக்கொண்டிருந்தார்.

ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு அனுமதியளித்தார்கள். (அவர் திரும்பிச் செல்லப்போனபோது) அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “உமது ஆயுதத்தை உம்முடனேயே வைத்துக்கொள். ஏனெனில், பனூ குறைழா யூதர்களை உம்முடைய விஷயத்தில் நான் அஞ்சுகிறேன்” என்று சொன்னார்கள். அவ்வாறே அந்த மனிதர் (தம்முடன்) ஆயுதத்தை எடுத்துக்கொண்டார்.

பிறகு அவர் திரும்பி வந்தபோது அவரது (புது) மனைவி வீட்டு வாசல் இரு நிலைக் கால்களுக்கிடையே நின்றுகொண்டிருந்தாள். உடனே அவர் அவள்மீது எறிவதற்காக ஈட்டியை நோக்கித் தமது கையைக் கொண்டு சென்றார். உடனே அவருடைய மனைவிக்கு ரோஷம் ஏற்பட்டு, “ஈட்டி எறிவதை நிறுத்துங்கள். (முதலில்) வீட்டுக்குள் நுழைந்து, நான் வெளியே வந்து நின்றதற்கு என்ன காரணம் என்பதைப் பாருங்கள்” என்று கூறினாள். அவ்வாறே அவர் வீட்டுக்குள் நுழைந்து பார்த்த போது, அங்கு மிகப் பெரிய பாம்பு ஒன்று படுக்கை விரிப்பின் மீது சுருண்டு கிடந்தது.

உடனே அவர் அதன் அருகில் ஈட்டியைக் கொண்டுசென்று அதன் உடலுக்குள் ஈட்டியைச் செருகினார். பிறகு அறையிலிருந்து வெளியே வந்து வீட்டி(ன் வளாகத்தி)ல் அந்த ஈட்டியை நட்டு வைத்தார். அந்த ஈட்டியில் கிடந்து பாம்பு துடித்தது. பிறகு அவ்விருவரில் யார் முதலில் இறந்தார்கள். அந்த பாம்பா? அல்லது அந்த இளைஞரா என்பது தெரியவில்லை. (பாம்பும் இளைஞரும் இருவருமே இறந்துவிட்டனர்.)

உடனே நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து தகவல் தெரிவித்தோம்; “அவரை (மீண்டும்) உயிர்ப்பிக்குமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்” என்று கூறினோம்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "உங்கள் நண்பருக்காக நீங்கள் பாவமன்னிப்புக் கோருங்கள்" என்று சொன்னார்கள்.

பிறகு "மதீனாவில் ஜின்கள் சில இஸ்லாத்தைத் தழுவியுள்ளன. அவற்றில் எதையேனும் நீங்கள் (பாம்பு வடிவத்தில்) கண்டால், அதற்கு நீங்கள் (வெளியேறுமாறு) மூன்று நாட்கள் அறிவிப்புச் செய்யுங்கள். அதற்குப் பின்னரும் அது உங்களுக்குத் தென்பட்டால், அதைக் கொன்றுவிடுங்கள். ஏனெனில், அது ஷைத்தான்தான்" என்றார்கள்.

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : முஸ்லிம் (4502)**

மூன்று நாட்களுக்குள் வெளியேறிவிடுகின்ற பாம்புகளில் ஜின்களும் இருக்கலாம். ஜின்களாக இல்லாதவையும் இருக்கலாம். அறிவிப்புச் செய்து மூன்று நாட்கள் கடந்த பிறகும் வீட்டில் பாம்புகள் தென்பட்டால் நிச்சயமாக அவை ஜின்களாக இருக்க முடியாது. அவை மனிதனிற்கு கேடு விளைவிக்கும் சாதாரண பாம்பு என்பதால் அதைக் கொல்லுமாறு நபியவர்கள் உத்தரவிட்டுள்ளார்கள்.

நாய் மற்றும் பாம்புகளின் தோற்றத்தை மட்டுமே நம்மால் காணமுடியும். ஜின்களின் உண்மையான தோற்றத்தை காண இயலாது. ஒரு குறிப்பிட்ட நாயையோ அல்லது பாம்பையோ ஜின் என்று நம்மால் முடிவு செய்யவும் இயலாது.

நாய் மற்றும் பாம்பு வடிவில் உள்ள ஜின்களால் சாதாரண நாய்களாலும் பாம்புகளாலும் என்ன செய்ய முடியுமோ அதைத் தவிர வேறு எதுவும் செய்ய இயலாது. பொதுவாக ஜின்களுக்கு வழங்கப்பட்டுள்ள அளப்பறிய ஆற்றல்கள் இந்த வகை ஜின்களுக்கு வழங்கப்படவில்லை.

**மதீனாவிற்கு மட்டும் உரிய சட்டம்**

பாம்புகளைக் கண்டால் எடுத்தஎடுப்பில் கொன்றுவிடாமல் வெளியேறுமாறு மூன்று நாட்கள் வரை அறிவிப்புச் செய்ய வேண்டும் என்ற இந்த சட்டத்தை நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு மட்டும் பிரத்யேகமானதாக கூறியுள்ளார்கள்.

மதீனாவில் ஜின்கள் சில இஸ்லாத்தைத் தழுவியுள்ளன என்று நபியவர்கள் கூறியதிலிருந்து இச்சட்டம் மதீனாவிற்கு மட்டும் உரியது என்பதை விளங்கிக்கொள்ளலாம்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மதீனாவில் இஸ்லாத்தைத் தழுவிய ஜின்கள் சில உள்ளன. உங்களில் ஒருவர், அவற்றில் எதையேனும் இந்தக் குடியிருப்புகளில் (பாம்பின் உருவில்) கண்டால் மூன்று நாட்கள் அவற்றுக்கு அவர் அறிவிப்புச் செய்யட்டும். அதற்குப் பின்னரும் அது அவருக்குத் தென்பட்டால், அதைக் கொன்றுவிடட்டும்! ஏனெனில், அது ஷைத்தான் ஆகும்.

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : முஸ்லிம் (4504)**

## உருமாற்றம் செய்யப்பட்ட ஜின்கள்

சில ஜின்கள் பாம்புகளாக உருமாற்றம் செய்யப்பட்டன என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இஸ்ரவேலர்களில் (சிலர்) பன்றிகளாகவும் குரங்குகளாகவும் உருமாற்றம் செய்யப்பட்டதைப் போல் (சில) ஜின்கள் பாம்புகளாக உருமாற்றப்பட்டுள்ளன.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : அஹ்மத் (3085) தப்ரானீ (4364)**

## பாம்புகளை கொல்ல வேண்டும்

பாம்புகள் மனித உயிரை பறிக்கின்ற விஷப்பிராணி என்பதால் அவற்றை கொல்லுமாறு நபி (ஸல்) அவர்கள் வலியுறுத்தியுள்ளார்கள். எனவே பாம்புகளைக் கண்டால் கொல்லாமல் விட்டுவிடக்கூடாது.

நபி (ஸல்) அவர்கள் மிம்பரின் மீதிருந்து உரையாற்றியபடி, "பாம்புகளைக் கொல்லுங்கள். முதுகில் இரண்டு வெள்ளைக் கோடுகள் கொண்ட ('துத் துஃப்யத்தைன்' என்னும்) பாம்பையும் குட்டையான- அல்லது- சிதைந்த வால் கொண்ட ('அப்தர்' எனும்) பாம்பையும் கொல்லுங்கள். ஏனெனில், அவையிரண்டும் (கண்) பார்வையை அவித்து விடும்; கருவைக் கலைத்து விடும்" என்று சொல்ல நான் கேட்டேன்.

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**

**நூல் : புகாரி (3297)**

நாங்கள் (ஒருமுறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் (மினாவிலுள்ள) ஒரு குகையில் இருந்துகொண்டிருந்தோம். அப்போது அவர்களுக்கு, “வல் முர்சலாத்தி” (ஒன்றன் பின் ஒன்றாக அனுப்பப்படுகின்றவை மீது சத்தியமாக!) எனும் (77ஆவது) அத்தியாயம் அருளப்பட்டது. அதை நபி (ஸல்) அவர்கள் ஓதிக்கொண்டிருந்தார்கள். நான் அதை அவர்களின் வாயிலிருந்து புத்தம் புதிதாகச் செவியேற்றுக்கொண்டிருந்தேன். அப்போது ஒரு பாம்பு (புற்றிலிருந்து) எங்களை நோக்கித் துள்ளி வந்தது. அப்போது நபி (ஸல்) அவர்கள், “அதைக் கொல்லுங்கள்!” என்றார்கள். அதை நோக்கி போட்டியிட்டுக் கொண்டு நாங்கள் விரைந்தோம். அது (தனது புற்றுக்குள் ஓடிப்) போய் (நுழைந்து)விட்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள், “நீங்கள் அதன் தீங்கிலிருந்து காப்பாற்றப்பட்டதைப் போன்றே அதுவும் உங்கள் தீங்கிலிருந்து காப்பாற்றப்பட்டுவிட்டது” என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி)**

**நூல் : புகாரி (4934)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஐந்து உயிரினங்கள் தீங்கு இழைக்கக் கூடியவையாகும்! அவற்றை இஹ்ராம் கட்டியவர் கொன்றால் அவர் மீது குற்றமில்லை! அவை பாம்பு காகம், பருந்து, எலி, வெறிநாய் ஆகியனவாகும்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : நஸயீ (2780)**

**பாம்புகள் பலிவாங்குமா?**

பாம்புகளை கொன்றால் அவை இறந்த பிறகு மீண்டும் உயிர் பெற்று தன்னைக் கொன்றவரை பலிவாங்கும் என்ற தவறான நம்பிக்கை சில மக்களிடம் உள்ளது. அடிபட்ட பாம்பு தப்பிவிட்டால் அடித்தவரை அது பாலிவாங்காமல் விடாது என்று கருதி பாம்பைக் கண்டால் பயந்து நடுங்குபவர்களும் உண்டு.

இது போன்ற தவறான நம்பிக்கையின் காரணமாக பாம்புகளை கொல்லாமல் விடுவது பாவம் என்கின்ற அளவிற்கு நபி (ஸல்) கண்டித்துள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : பாம்புகள் பலிவாங்கிவிடும் என்று பயந்து யார் அவைகளை கொல்லாமல் விட்டுகிறாரோ அவர் நம்மைச் சார்ந்தவரல்ல. பாம்புகளுடன் நாம் சண்டையிடத்தொடங்கியது முதல் என்றுமே அவைகளுடன் நாம் இணக்கமானதில்லை.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : அபூதாவுத் (4570)**

## ஜின்களில் ஆண்களும் பெண்களும் உண்டு

ஒவ்வொரு உயிரினத்திலும் ஆண் பெண் என்ற இரு இனம் இருப்பது போல் ஜின்களிலும் ஆண் பெண் இனங்கள் உண்டு. மனிதர்களில் ஆண் இனம் இருப்பது போல் ஜின்களிலும் ஆண் இனம் உள்ளது என்று திருமறைக் குர்ஆன் கூறுகிறது.

மனிதர்களில் உள்ள ஆண்களில் சிலர் ஜின்களில் உள்ள சில ஆண்களைக் கொண்டு பாதுகாப்புத் தேடிக் கொண்டிருந்தனர். எனவே இவர்களுக்கு கர்வத்தை அவர்கள் அதிகமாக்கி விட்டனர்.

**அல்குர்ஆன் (72 : 6)**

ஷைத்தான்கள் ஜின் இனத்தைச் சார்ந்தவர்களாவர். ஷைத்தான்களில் ஆண் பெண் இனம் இருப்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். ஜின்களில் இவ்விரு இனம் இருப்பதை இதன் மூலம் அறிந்துகொள்ளலாம்.

நபி (ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்குள் நுழைய முற்படும்போது, “இறைவா! (அருவருக்கத்தக்க செயல்கள், இழிவான எண்ணங்கள் ஆகியற்றைத் தூண்டும்) ஆண் பெண் ஷைத்தானி(ன் தீங்கி)லிருந்து உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன்” என்று கூறுவார்கள்.

**அறிவிப்பவர் : அனஸ் (ரலி)**

**நூல் : புகாரி (142)**

## ஜின்களின் இனப்பெருக்கம்

ஜின்களில் ஆண் பெண் ஜோடிகள் இருப்பதால் அவர்களுக்கிடையே இணைபெருக்கம் நடைபெறும் என்பதை அறியலாம். ஜின் இனத்தைச் சார்ந்த ஷைத்தானிற்கு வழிதோன்றல்கள் இருப்பதாக அல்லாஹ் கூறுவதிலிருந்தும் இதை அறியாம்.

என்னையன்றி ஷைத்தானையும், அவனது சந்ததிகளையும் பொறுப்பாளர்களாக்கிக் கொள்கிறீர்களா? அவர்கள் உங்களுக்கு எதிரிகள். அநீதி இழைத்தோர் பகரமாக்கியது மிகவும் கெட்டது.

**அல்குர்ஆன் (18 : 50)**

இணைப்பெருக்கத்திற்குத் தேவையான காம உணர்வை மனிதர்களுக்கு ஏற்படுத்தி இருப்பது போல் ஜின்களுக்கும் அல்லாஹ் ஏற்படுத்தியுள்ளான்.

அவற்றில் பார்வைகளைத் தாழ்த்திய கன்னியர் இருப்பார்கள். இவர்களுக்கு முன்னர் அவர்களை எந்த மனிதனும் ஜின்னும் தீண்டியதில்லை.

**அல்குர்ஆன் (55 : 56)**

தனது துணையை தீண்டும் பண்பு மனிதர்களுக்கும் ஜின்களுக்கும் உண்டு என்ற கருத்து மேற்கண்ட வசனத்தில் உள்ளடங்கியுள்ளது.

மனிதன் விரும்புகின்ற விஷயங்களில் இல்லற இன்பம் முக்கியமானது. இதை மனிதன் மட்டுமல்லாமல் ஜின்களும் பெரும் பாக்கியமாக நினைக்கிறார்கள் என்பதால் மனித ஜின் கூட்டத்தினரை அழைத்து இந்த பாக்கியம் சொர்க்கத்திலும் கிடைக்கும் என்று அல்லாஹ் கூறுகிறான்.

அங்கேயும் சிறந்த அழகிகள் இருப்பார்கள். உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கருதுகிறீர்கள்?

கூடாரங்களில் தங்க வைக்கப்பட்ட ஹூர் எனும் கன்னியராவர். உங்கள் இறைவனின் அருட் கொடைகளில் எதனைப் பொய்யெனக் கருதுகிறீர்கள்?

இவர்களுக்கு முன் அவர்களை எந்த மனிதனும் ஜின்னும் தீண்டியதில்லை. உங்கள் இறைவனின் அருட் கொடைகளில் எதனைப் பொய்யெனக் கருதுகிறீர்கள்?

பச்சை நிறத்து இரத்தினக் கம்பளத்தின் மீதும், அழகிய சாய்மானத்தின் மீதும் சாய்ந்து கொண்டிருப்பார்கள்.

**அல்குர்ஆன் (55 : 70)**

## ஜின்களுக்கிடையே அன்பு

நேசிப்பது இரக்கப்படுவது போன்ற குணங்கள் ஜின்களுக்கும் உண்டு.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : அன்பின் நூறு பாகங்களும் அல்லாஹ்வுக்கே உரியவையாகும். அவற்றில் ஒன்றை ஜின், மனிதன், மிருகங்கள், ஊர்வன ஆகிய வற்றுக்கிடையே இறக்கினான். இந்த ஒரு பங்கினால்தான் அவை ஒன்றன்மீதொன்று பாசம் கொள்கின்றன; பரிவு காட்டுகின்றன. அதன் மூலம்தான் காட்டு விலங்குகூட தன் குட்டிமீது பாசம் காட்டுகிறது. (அவற்றில்) தொண்ணூற்று ஒன்பது பாகம் அன்பை அல்லாஹ் ஒதுக்கி வைத்துள்ளான். அவற்றின் மூலம் மறுமை நாளில் தன் (நல்ல) அடியார்களுக்கு (விஷேசமாக) அன்பு காட்டுவான்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (5312)**

## ஜின்களின் உணவு

மனிதர்கள் உண்டுவிட்டு எரியும் எலும்புகளும் கால்நடைகளின் சாணங்களும் கரிக்கட்டைகளும் ஜின்களின் உணவாகும். சாப்பிடுவதற்கு இவற்றில் ஒன்றுமில்லையே என்று நமக்குத் தோன்றினாலும் ஜின்களுக்கு அதில் அல்லாஹ் நிறைவான உணவை வைத்துள்ளான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். என்னிடம் 'நஸீபீன்' என்னுமிடத்தைச் சேர்ந்த ஜின்களின் குழு ஒன்று வந்தது. அவை நல்ல ஜின்களாயிருந்தன. அவை என்னிடம் உணவு தரும்படி கேட்டன. நான், "அவை எந்த எலும்பையும் எந்த கெட்டிச் சாணத்தையும் கடந்து சென்றாலும் அதில் உணவைப் பெற்றுக் கொள்ள வேண்டும்" என்று அல்லாஹ்விடம் அவற்றுக்காகப் பிரார்த்தித்தேன்."என்று பதிலளித்தார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (3860)**

ஜின்கள் நபி (ஸல்) அவர்களிடம் (தங்களுக்கு அனுமதிக்கப்பட்ட) உணவு குறித்துக் கேள்வி கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “அல்லாஹ்வின் பெயர் சொல்லி அறுக்கப்பட்ட ஒவ்வொரு பிராணியின் எலும்பும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டதாகும். அது உங்கள் கரங்களில் இறைச்சியைவிட நிறைவானதாக இருக்கும். ஒவ்வொரு கெட்டிச் சாணமும் உங்களுடைய கால்நடைகளுக்குத் தீவணமாகும்” என்று கூறினார்கள். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் தோழர்களிடம்), “எனவே, நீங்கள் (இயற்கைக் கடனை நிறைவேற்றிய பின்பு எலும்பு, கெட்டிச் சாணம் ஆகிய) அவ்விரண்டின் மூலம் துப்புரவு (இஸ்தின்ஜா) செய்யாதீர்கள்; அவ்விரண்டும் உங்களுடைய சகோதரர்க(ளான ஜின்க)ளின் உணவாகும்” என்று கூறினார்கள். **அறிவிப்பவர் : இப்னு மஸ்ஊத் (ரலி) நூல் : முஸ்லிம் (767)**

ஜின்கள் குழுவினர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து முஹம்மதே எழும்பு கெட்டிச் சாணம் கறிக்கட்டை ஆகியவற்றால் துப்புரவு செய்வதை விட்டும் உங்கள் சமுதாயத்தினரை தடுங்கள். ஏனென்றால் இவற்றில் தான் அல்லாஹ் எங்களுக்கு உணவை ஏற்படுத்தியிருக்கிறான் என்று கூறின. ஆகவே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இதனை தடுத்தார்கள்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி)**

**அபூதாவுத் (35)**

**ஜின்களின் இருப்பிடம்**

மனிதர்களைப் போலவே ஜின்களும் பூமியில் ஆங்காங்கே வசிக்கின்றன. குறிப்பாக ஓடைகள் மற்றும் மலைக்கணவாய்களில் தங்கி இருக்கின்றன.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். என்னிடம் ‘நஸீபீன்’ என்னுமிடத்தைச் சேர்ந்த ஜின்களின் குழு ஒன்று வந்தது. அவை நல்ல ஜின்களாயிருந்தன. அவை என்னிடம் உணவு தரும்படி கேட்டன. நான், “அவை எந்த எலும்பையும் எந்த கெட்டிச் சாணத்தையும் கடந்து சென்றாலும் அதில் உணவைப் பெற்றுக் கொள்ள வேண்டும்” என்று அல்லாஹ்விடம் அவற்றுக்காகப் பிரார்த்தித்தேன்.”என்று பதிலளித்தார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (3860)**

அபுத்தய்யாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் : வயோதிகராக இருந்த அப்தூர் ரஹ்மான் பின் கம்பஷ் (ரலி) அவர்களிடம் நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காலத்தை அடைந்தவரா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம் என்று கூறினார்கள். ஷைத்தான்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை (தாக்குவதற்காக) நெருங்கிய போது நபியவர்கள் என்ன செய்தார்கள் என்று நான் கேட்டேன். அதற்கு அவர் அந்த இரவில் ஷைத்தான்கள் ஓடைகளிலிருந்தும் மலைக் கணவாய்களிலிருந்தும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி (தாக்குவதற்காக) விரைந்தன. அவர்களில் ஒரு ஷைத்தானுடைய கையில் தீப்பந்தம் இருந்தது. அதன் மூலம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முகத்தை கரிப்பதற்கு அந்த ஷைத்தான் நினைத்தது. அப்போது ஜிப்ரீல் (அலை) அவர்கள் வானிலிருந்து இறங்கி வந்து முஹம்மதே நான் கூறுவதை நீங்களும் கூறிக்கொள்ளுங்கள் என்று கூறினார்கள். அல்லாஹ்வின் முழுமையான (குணமளிக்கும்) சொற்களைக் கொண்டு அவன் படைத்தவற்றின் தீங்கிலிருந்தும் வானிலிருந்து இறங்குபவற்றின் தீங்கிலிருந்தும் வானில் ஏறுபவற்றின் தீங்கிலிருந்தும் இரவு பகலில் ஏற்படும் குழப்பதின் தீங்கிலிருந்தும் நன்மையை விளைவிக்கும் நட்சத்திரத்தைத் தவிர்த்து மற்ற அனைத்து தாரகைகளின் தீங்கிலிருந்தும் அளவற்ற அருளாளனே (உன்னிடம்) பாதுகாப்புத் தேடுகிறேன் என்று ஜிப்ரீல் (அலை) கூறினார்கள். உடனே ஷைத்தான்களின் நெருப்பு அனைக்கப்பட்டு பாக்கியமும் உயர்வும் மிக்க அல்லாஹ் அவர்களை தோல்வியுறச் செய்தான்.

**நூல் : அஹ்மத் (14914)**

### ஜின்களுக்கு மரணம் உண்டு

மனிதர்களைப் போலவே ஜின்களுக்கும் மரணம் உண்டு. மனிதர்களிலும் ஜின்களிலும் பலர் சென்றுவிட்டதாக அல்லாஹ் கூறுவதிலிருந்து இதை அறியலாம்.

அவர்களுக்கு முன் சென்ற ஜின்கள் மற்றும் மனிதர்களுடன் சேர்த்து இவர்களுக்கு எதிராகவும் இறைவனின் கட்டளை உறுதியாகி விட்டது. இவர்கள் நஷ்டமடைந்தனர்.

**அல்குர்ஆன் (46 : 18)**

நபி (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) பிரார்த்தனை செய்துவந்தார்கள்: (இறைவா!) உன் கண்ணியத்தின் பெயரால் பாதுகாப்புக் கோருகிறேன். உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. ஜின் இனத்தாரும் மனித குலத்தாரும் இறந்துவிடுவார்கள்; (ஆனால்,) நீ இறக்கமாட்டாய்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் : புகாரி (7383)

**ஜின்களை காண முடியாது**

இந்த இனத்தவர் நெருப்பால் படைக்கப்பட்டவர்கள் என்பதால் மனிதர்களின் கண்களுக்குத் தென்பட மாட்டார்கள். கண்களுக்குத் தென்பட மாட்டார்கள் என்ற விஷயத்தில் இந்தப் படைப்பு வானவர்களைப் போன்றது எனலாம்.

ஜின் இனத்தைச் சார்ந்த ஷைத்தானும் அவனது கூட்டத்தாரும் மனிதர்களை பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் நாம் இவர்களை பார்க்க முடியாது என்று திருக்குர்ஆன் கூறுகிறது.

ஆதமுடைய மக்களே! உங்கள் பெற்றோர் இருவரையும் ஷைத்தான் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றியது போல் உங்களையும் அவன் குழப்பி விட வேண்டாம். அவர்களின் வெட்கத்தலங்களை அவர்களுக்குக் காட்ட ஆடைகளை அவர்களை விட்டும் அவன் கழற்றினான். நீங்கள் அவர்களைக் காணாத வகையில் அவனும், அவனது கூட்டத்தாரும் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். நம்பிக்கை கொள்ளாதோருக்கு ஷைத்தான்களை உற்ற நண்பர்களாக நாம் ஆக்கி விட்டோம்.

அல்குர்ஆன் (7 : 27)

நபி (ஸல்) அவர்கள் குர்ஆனை ஓதியபோது குர்ஆனை கேட்பதற்காக அவர்களை சுற்றி ஜின்கள் அமர்ந்திருந்தனர். இதை நபி (ஸல்) அவர்களால் சுயமாக அறிந்துகொள்ளமுடியவில்லை. அல்லாஹ் அவர்களுக்கு வஹியின் மூலம் இதை அறிவித்துக்கொடுத்த பின்பே இதை நபியவர்கள் அறிந்துகொண்டார்கள்.

ஜின்களில் ஒரு கூட்டத்தார் செவியுற்று 'நாங்கள் ஆச்சரியமான குர்ஆனைச் செவியுற்றோம்' எனக் கூறியதாக எனக்கு அறிவிக்கப்பட்டது" என (முஹம்மதே!) கூறுவீராக!

அல்குர்ஆன் (72 : 1)

இறைவனுடைய உதவியின்றி சுயமாக நபி (ஸல்) அவர்களாலேயே அறிந்துகொள்ள முடியாது என்றால் வேறு எவராலும் நிச்சயமாக ஜின்களை பார்க்கவே முடியாது. இதை நாம்

விளங்கிக்கொண்டால் ஜின்களின் பெயரால் நடக்கும் பித்தலாட்டங்களில் நாம் விழுந்து விட மாட்டோம்.

**விலங்குகளால் பார்க்க முடியும்**

ஜின் இனத்தைச் சார்ந்த ஷைத்தானை பார்க்கும் ஆற்றலை அல்லாஹ் விலங்குகளுக்கு வழங்கியுள்ளான். இதை பின்வரும் ஹதீஸிலிருந்து அறியலாம்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நீங்கள் சேவல்கள் கூவுகின்ற சத்தத்தைக் கேட்டால் அல்லாஹ்விடம் அவனது அருளைக் கேளுங்கள்: ஏனெனில், அவை வானவரைப் பார்த்திருக்கின்றன. (அதனால் தான் கூவுகின்றன.) கழுதை கத்தும் சத்தத்தை நீங்கள் கேட்டால் ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள். ஏனெனில், அது ஷைத்தானைப் பார்த்திருக்கின்றது. (அதனால் தான் கத்துகின்றது.)

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (3303)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நீங்கள் இரவில் நாய் உளையிடுவதையும் கழுதை கத்துவதையும் செவியுற்றால் அல்லாஹ்விடம் பாதுகாப்புத்தேடுங்கள். ஏனென்றால் அவைகள் உங்களால் பார்க்க முடியாத (தீய)வற்றை பார்க்கின்றன.

**அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)**

**நூல் : அபூதாவுத் (4439)**

மேற்கண்ட செய்தி ஜின்களை மனிதர்களால் பார்க்க முடியாது என்று கூறுவதுடன் விலங்குளால் பார்க்க் முடியும் என்ற கருத்தையும் தருகிறது.

**நபியவர்களுக்கு வழங்கப்பட்ட தனிச்சிறப்பு**

ஜின்களை சாதாரண மனிதர்களால் பார்க்க முடியாவிட்டாலும் சில சந்தர்பங்களில் ஜின்களை காணுகின்ற வாய்ப்பை அல்லாஹ் நபிமார்களுக்கு பிரத்யேகமாக ஏற்படுத்தி இருக்கிறான். நபி (ஸல்) அவர்கள் கூட ஒரு சமயத்தில் ஜின்னை பார்த்திருக்கிறார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு நாள்) தொழும்போது “நான் உன்னிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்” என்றும், “அல்லாஹ்வின் சாபத்தால் உன்னை நான்

சபிக்கிறேன்"என்றும் மூன்று முறை கூறியதை நாங்கள் செவியுற்றோம். மேலும், அவர்கள் தமது கரத்தை விரித்து எதையோ பிடிப்பதைப் போன்று சைகை செய்தார்கள். தொழுது முடித்ததும் நாங்கள் "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் தொழும்போது ஒன்றைக் கூறினீர்கள். இதற்கு முன் தாங்கள் அவ்வாறு கூறியதை நாங்கள் கேட்டதில்லையே? மேலும், நீங்கள் உங்கள் கரத்தை விரித்ததையும் நாங்கள் கண்டோமே (ஏன்)?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள் "அல்லாஹ்வின் எதிரி இப்லீஸ் ஒரு தீப்பந்தத்தை ஏந்திக்கொண்டு அதை என் முகத்தில் வைக்க (என்னிடம்) வந்தான். உடனே நான் 'உன்னிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்' என்று மூன்று முறையும் 'அல்லாஹ்வின் முழு சாபத்தால் உன்னை நான் சபிக்கிறேன்' என மூன்று முறையும் கூறினேன். ஆனால், அவன் பின்வாங்கிச் செல்லவில்லை. பிறகு நான் அவனைப் பிடிக்க விரும்பினேன். அல்லாஹ் வின் மீதாணையாக! எம் சகோதரர் சுலைமான் (அலை) அவர்களின் வேண்டுதல் மட்டும் இல்லையாயின், காலையில் மதீனா நகரச் சிறுவர்கள் அவனுடன் விளையாடும் வகையில் (இந்தப் பள்ளிவாசல்) அவன் கட்டிவைக்கப்பட்டிருப்பான்" என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : அபுத்தர்தா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (942)**

நபி (ஸல்) அவர்கள் ஜின்னை பிடித்த போது நபியவர்கள் மட்டும் தான் நபித்தோழர்களின் கண்களுக்கு தென்பட்டார்கள். ஜின்னை நபித்தோழர்களால் பார்க்க முடியவில்லை. நான் ஜின்னைத் தான் பிடித்தேன் என்று நபி (ஸல்) அவர்கள் கூறிய பிறகே நபித்தோழர்களுக்கு விஷயம் தெரிந்தது.

நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் இருந்த நபித்தோழர்களுக்கே ஜின்னை பார்க்க முடியவில்லை. ஜின் செய்யும் சேட்டையை உணர முடியவில்லை என்றால் மற்றவர்களால் ஜின்களை பார்க்கவே முடியாது என்பது மிகத் தெளிவாகிறது.

**நபி (ஸல்) அவர்கள் ஜின்களை பார்த்தார்களா?**

நபி (ஸல்) அவர்கள் ஜின்களை பார்த்தும் ஜின்களோடு பேசியும் இருக்கிறார்கள் என்பது தான் சரியான கருத்தாகும். இதற்கு மேலுள்ள செய்தியும் பின்வரும் ஹதீஸ்களும் ஆதாரமாக உள்ளது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். என்னிடம் 'நஸீபீன்' என்னுமிடத்தைச் சேர்ந்த ஜின்களின் குழு ஒன்று வந்தது. அவை நல்ல ஜின்களாயிருந்தன. அவை என்னிடம் உணவு தரும்படி கேட்டன. நான், "அவை எந்த எலும்பையும் எந்த கெட்டிச் சாணத்தையும் கடந்து சென்றாலும் அதில் உணவைப் பெற்றுக் கொள்ள வேண்டும்" என்று அல்லாஹ்விடம் அவற்றுக்காகப் பிரார்த்தித்தேன்."என்று பதிலளித்தார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (3860)**

ஜின்கள் நபி (ஸல்) அவர்களிடம் (தங்களுக்கு அனுமதிக்கப்பட்ட) உணவு குறித்துக் கேள்வி கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் பெயர் சொல் அறுக்கப்பட்ட ஒவ்வொரு பிராணியின் எலும்பும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டதாகும். அது உங்கள் கரங்களில் இறைச்சியைவிட நிறைவானதாக இருக்கும். ஒவ்வொரு கெட்டிச் சாணமும் உங்களுடைய கால்நடைகளுக்குத் தீவணமாகும்" என்று கூறினார்கள். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தம் தோழர்களிடம்), "எனவே, நீங்கள் (இயற்கைக் கடனை நிறைவேற்றிய பின்பு எலும்பு, கெட்டிச் சாணம் ஆகிய) அவ்விரண்டின் மூலம் துப்புரவு (இஸ்தின்ஜா) செய்யாதீர்கள்; அவ்விரண்டும் உங்களுடைய சகோதரர்க(ளான ஜின்க)ளின் உணவாகும்" என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு மஸ்ஊத் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (767)**

மேலுள்ள செய்திகளுக்கு மாற்றமாக நபியவர்கள் ஜின்களை பார்க்கவுமில்லை. ஜின்களுக்கு குர்ஆனை ஓதிக்காட்டவுமில்லை என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கருத்துத் தெரிவித்துள்ளார்கள்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது : அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஜின்களுக்கு(க் குர்ஆனை) ஓதிக்காட்டவுமில்லை; ஜின்களை அவர்கள் பார்க்கவுமில்லை.

**நூல் : முஸ்லிம் (766)**

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் இக்கூற்று அபுத்தர்தா (ரலி) அபூஹுரைரா (ரலி) இப்னு மஸ்ஊத் (ரலி) ஆகிய மூவரும் அறிவிக்கும் செய்திக்கு மாற்றமாக உள்ளது. இம்மூவரும் நடந்து முடிந்த ஒரு விஷயத்தைப் பற்றி கூறுகிறார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஜின்களை கண்டு அவர்களுடன் பேசிய தகவல் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு சென்றடையாமல் இருந்திருக்கலாம். எனவே இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் இக்கூற்று தவறானதாகும்.

**ஜின்களின் ஆற்றல்**

ஜின்கள் மனிதர்களை விட பன்மடங்கு ஆற்றல் உள்ள படைப்பாகும். மனிதனால் செய்ய முடியாத பெரும் பெரும் காரியங்களை ஜின்கள் சர்வசாதாரணமாக செய்து முடிக்கவல்லவை.

கண் மூடி திறப்பதற்குள் நெடு தொலைவில் உள்ள இடத்திற்குச் சென்று பொருளை எடுத்து வரக்கூடிய ஆற்றல் ஜின்களுக்கு உண்டு. இந்தப் பணியை சுலைமான் (அலை) அவர்களுக்கு ஜின்கள் செய்து கொடுத்ததாக அல்லாஹ் கூறுகிறான்.

"பிரமுகர்களே! அவர்கள் கட்டுப்பட்டு என்னிடம் வருவதற்கு முன்னால் அவளது சிம்மாசனத்தை என்னிடம் கொண்டு வருபவர் உங்களில் யார்?" என்று (ஸுலைமான்) கேட்டார்.

"உங்கள் இடத்திலிருந்து நீங்கள் எழுவதற்கு முன்னால் அதை உங்களிடம் நான் கொண்டு வருகிறேன். நான் நம்பிக்கைக்குரியவன்; வலிமையுள்ளவன்" என்று இப்ரீத் என்ற ஜின் கூறியது.

கண் மூடித் திறப்பதற்குள் அதை நான் உம்மிடம் கொண்டு வருகிறேன் என்று வேதத்தைப் பற்றிய ஞானம் பெற்றது (ஜின்) கூறியது. தன் முன்னே அது வந்திருக்க அவர் கண்டதும் "நான் நன்றி செலுத்துகிறேனா? அல்லது நன்றி மறக்கிறேனா?" என்று என்னைச் சோதிப்பதற்காக இது எனது இறைவனின் அருட்கொடை. நன்றி செலுத்துபவர் தமக்காகவே நன்றி செலுத்துகிறார். யார் நன்றி மறக்கிறாரோ என் இறைவன் தேவையற்றவன்; கண்ணியமிக்கவன்.

**அல்குர்ஆன் (27 : 38)**

பிரம்மாண்டமான கட்டிடங்களையும் சுலைமான் நபிக்குத் தேவையான பொருட்களையும் வியக்கத்தக்க விதத்தில் ஜின்கள் செய்துகொடுத்தது. கடலில் மூழ்கி முத்தெடுக்கும் சிரமமான பணியையும் ஜின்கள் செய்தன.

சுலைமான் விரும்பிய போர்க்கருவிகளையும், சிற்பங்களையும், தடாகங்களைப் போன்ற கொப்பரைகளையும், நகர்த்த முடியாத பாத்திரங்களையும், அவருக்காக ஜின்கள் செய்தன.

**அல்குர்ஆன் (34 : 13)**

ஷைத்தான்களில் அவருக்காக முத்துக்குளிப்போரையும், அது தவிர வேறு பணியைச் செய்வோரையும் (வசப்படுத்திக்) கொடுத்தோம். நாம் அவர்களைக் கண்காணிப்போராக இருந்தோம்.

**அல்குர்ஆன் (21 : 82)**

ஷைத்தான்களில் கட்டடம் கட்டுவோரையும், முத்துக் குளிப்போரையும், விலங்கிடப்பட்ட வேறு சிலரையும் (அவருக்கு) வசப்படுத்திக் கொடுத்தோம். "இது நமது அருட்கொடை! கணக்கின்றி மற்றவருக்குக் கொடுக்கலாம்! அல்லது நீரே வைத்துக் கொள்ளலாம்!" (என்று கூறினோம்.)

**அல்குர்ஆன் (38 : 37)**

**ஜின்களின் விண்ணுலகப் பயணம்**

வாகனங்களின் துனையின்றி விண்ணில் வானவர்கள் இருக்கும் பகுதிகளுக்கு அருகில் சென்று வருகின்ற ஆற்றலை ஜின்கள் பெற்றிருந்தன.

வானத்தைத் தீண்டினோம். அது கடுமையான பாதுகாப்பாலும், தீப்பந்தங்களாலும் நிரப்பப்பட்டுள்ளதைக் கண்டோம். (ஒட்டுக்) கேட்பதற்காக அங்கே பல இடங்களில் அமர்வோராக இருந்தோம். இப்போது யார் (ஒட்டுக்) கேட்கிறாரோ அவர் காத்திருக்கும் தீப்பந்தத்தை தனக்கு (எதிராக) காண்பார்.

**அல்குர்ஆன் (72 : 8)**

விண்கலங்களின் துணையுடன் வானம் பூமியின் எல்லையைக் கடந்து செல்லும் வாய்ப்பை விஞ்ஞான வளர்ச்சியால் இன்று மனிதன் பெற்றுக்கொண்டான். ஆனால் ஜின்களோ விண்கலங்களின் உதவி இல்லாமல் வெறுமனே விண்ணுலக பயனத்தை மேற்கொள்ளும் ஆற்றலை பெற்றிருந்தன.

மனித ஜின் கூட்டமே! வானங்கள் மற்றும் பூமியின் விளிம்புகளைக் கடந்து செல்ல நீங்கள் சக்தி பெற்றால் கடந்து செல்லுங்கள்! ஆற்றல் மூலம் தவிர நீங்கள் கடந்து செல்ல மாட்டீர்கள்.

**அல்குர்ஆன் (55 : 33)**

## ஒட்டுக்கேட்ட ஜின்கள்

வானவர்கள் தங்களுக்கு இடப்பட்ட கட்டளைகளைப் பற்றிப் பேசும் போது, ஜின்கள் வானத்தின் அருகே சென்று அங்கு பேசுவதை ஒட்டுக்கேட்பார்கள்.

வானுலகில் பேசப்படும் அனைத்து விஷயங்களையும் ஜின்களால் ஒட்டுக்கேட்க முடியாது. மாறாக ஓரிரு விஷயங்களை மட்டுமே கடும் போராட்டத்திற்கு மத்தியில் ஜின்கள் ஒட்டுக்கேட்கின்றன.

முதல் வானத்தை நட்சத்திரங்கள் எனும் அலங்காரம் மூலம் நாம் அலங்கரித்துள்ளோம். கட்டுப்படாத ஒவ்வொரு ஷைத்தானிடமிருந்தும் பாதுகாப்பாக (அவற்றை ஆக்கினோம்).

(வானவர்கள் எனும்) உயர்ந்த கூட்டத்தினரிடமிருந்து (ஓரிரு சொற்களை) ஒட்டுக் கேட்பவனைத் தவிர அவர்கள் செவியுற முடியாது. விரட்டப்படுவதற்காக ஒவ்வொரு பகுதியிலிருந்து அவர்கள் மீது எறியப்படும். அவனைப் பிரகாசமான தீப்பந்தம் விரட்டும். அவர்களுக்கு நிலையான வேதனையுமுண்டு.

**அல்குர்ஆன் (37 : 8)**

விரட்டப்பட்ட ஒவ்வொரு ஷைத்தானிடமிருந்தும் ஒட்டுக் கேட்பவனைத் தவிர மற்றவர்கள் அதை நெருங்காதவாறு பாதுகாத்துள்ளோம். அவனை ஒளி வீசும் தீப்பந்தம் விரட்டும்.

**அல்குர்ஆன் (15 : 17)**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : அல்லாஹ் ஒரு விஷயத்தை வானத்தில் தீர்மானித்துவிட்டால், வானவர்கள் இறைக்கட்டளைக்குப் பணிந்தவர்களாகத் தம் சிறகுகளை அடித்துக்கொள்வார்கள். (அல்லாஹ்வின் அந்தக் கட்டளையை,) பாறை மேல் சங்கிலியை அடிப்பதால் எழும் ஓசையைப் போல் (வானவர்கள் கேட்பார்கள். அப்போது வானவர்கள் பீதிக்குள்ளகிறார்கள்.) பின்னர், அவர்களின் இதயங்களிலிருந்து பீதி அகற்றப்படும்போது (அல்லாஹ்விற்கு நெருக்கமான வானவர்களிடம்) “நம் இறைவன் என்ன சொன்னான்?” என்று வினவுகின்றார்கள்.

அதற்கு அவர்கள் வினவியோரிடம், "(நம் இறைவன் இன்னின்ன) உண்மை(யான கட்டளை)யைச் சொன்னான் –அவன் உயர்ந்தவன்; பெரியவன்"– என்று கூறுவர். உடனே அந்த உரையாடலை ஒட்டுக் கேட்பவர்களும் (அவர்களிடமிருந்து) ஒட்டுக் கேட்பவர்களும் ஒருவர் மற்றவர் மேலே இவ்வாறு இருந்துகொண்டு செவியேற்று விடுகின்றனர்.

இதைக் கூறும்போது (அறிவிப்பாளர்) சுஃப்யான் (ரஹ்) அவர்கள், தம் விரல்களைச் சாய்த்து அவற்றுக்கிடையே பிரித்துக்காட்டி (ஒன்றன் மீது ஒன்றை அடுக்கி) விளக்கிக் காட்டினார்கள்.

ஆக, முதலில் ஒட்டுக் கேட்டவர் அந்த உரையாடலைத் தனக்குக் கீழேயிருப்பவரிடமும், பிறகு அவர் தமக்குக் கீழேயிருப்பவரிடமும், இறுதியில் (கேட்டவர்) சூனியக்காரனின் அல்லது குறிசொல்பவனின் நாவில் போட்டுவிடுகின்றார்கள்.

சில நேரங்களில் அந்த உரையாடலை அடுத்தவரிடம் தெரிவிப்பதற்கு முன்பாகவே (முதலில் ஒட்டுக்கேட்டவரைத்) தீச் சுவாலை சென்றடைந்து (கரித்து)விடுவதுண்டு. இன்னும் சில நேரங்களில் தீச் சுவாலை சென்றடைவதற்கு முன்பே அந்த உரையாடலை (அடுத்தவரிடம்) சேர்த்துவிடுவதுமுண்டு. (இவ்வாறு ஒருவர் பின் ஒருவராக பூமியிலுள்ள குறிகாரன் வரை அது போய்ச்சேர்கிறது.) அவன் அதனுடன் நூறு பொய்களை(க் கலந்து மக்களிடம்) பேசுகின்றான். அப்போது (இதைக் கேட்கும் மக்களிடையே) இன்னின்ன நாளில் இன்னின்னவாறு நடக்குமென அவர்(குறிகாரர்) நம்மிடம் (முன்னறிவிப்பாக) சொல்லிவிட்டிருக்கவில்லையா?" என்று பேசப்படும். இப்போது வானத்திலிருந்து செவியேற்கப்பட்ட அந்த வார்த்தையினால் (குறி சொல்லும்) அவர் உண்மை சொல்லிவிட்டதாகக் கருதப்படுவார்.

**அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (4800)**

**ஜின்களும் குறிகாரர்களும்**

ஜின்கள் ஓரிரு வானுலகச் செய்திகளை செவியுறுகின்றன. இதன்பின் குறிகாரனிடம் அத்தகவலை கடத்துகின்றன. இவ்வாறு குர்ஆனும் நபிமொழிகளும் கூறுகின்றது.

ஜின்களால் அனைத்து விசயங்களையும் ஒட்டுக்கேட்க முடியாது. மிகவும் அரிதாக கடும் போராட்டங்களுக்கு மத்தியில் ஓரிரு விசயங்களை மட்டுமே ஒட்டுக்கேட்கிறார்கள். அந்த ஓரிரு

விசயங்களை கூட அவர்களால் மிகச் சரியாக கேட்க முடியாது. சரியாகச் செவியுறாமல் தவறானத் தகவல்களை குறிகாரனிடம் தெரிவித்துவிடுவார்கள். குறிகாரர்கள் இத்துடன் பல பொய்களை இணைத்துக் கூறி விடுகின்றனர்.

இதை ஷைத்தான்கள் இறக்கிடவில்லை. அது அவர்களுக்குத் தகுதியானதும் அல்ல. அதற்கு அவர்களால் இயலாது. அவர்கள் செவியேற்பதை விட்டும் தடுக்கப்பட்டவராவர்.

**அல்குர்ஆன் (26 : 210)‘**

வானத்தைத் தீண்டினோம். அது கடுமையான பாதுகாப்பாலும், தீப்பந்தங்களாலும் நிரப்பப்பட்டுள்ளதைக் கண்டோம். (ஒட்டுக்) கேட்பதற்காக அங்கே பல இடங்களில் அமர்வோராக இருந்தோம். இப்போது யார் (ஒட்டுக்) கேட்கிறாரோ அவர் காத்திருக்கும் தீப்பந்தத்தை தனக்கு (எதிராக) காண்பார். **அல்குர்ஆன் (72 : 8)**

ஜின்கள் ஒட்டுக்கேட்பதை விட்டும் தடுக்கப்பட்டதால் மறைவான விஷயங்கள் எதுவும் அவர்களால் அறிந்துகொள்ள முடியாது. இதை ஜின்களே கூறுகின்றன.

பூமியில் உள்ளவர்களுக்குக் கெடுதி நாடப்பட்டுள்ளதா? அல்லது அவர்களின் இறைவன் அவர்களுக்கு நேர் வழியை நாடியிருக்கிறானா? என்பதை அறிய மாட்டோம்.

**அல்குர்ஆன் (72 : 10)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்கள் சிலருடன் ‘உக்காழ்’ எனும் சந்தையை நோக்கிச் சென்றார்கள். (இந்த நேரத்தில்) ஷைத்தான்களுக்கும் வானுலகச் செய்திகளுக்குமிடையே திரையிடப்பட்டு (அச்செய்திகளைக் கேட்கவிடாமல் ஷைத்தான்களைத் தடுக்கப் பட்டு)விட்டது. (வானுலகச் செய்திகளை ஒட்டுக் கேட்கச் சென்ற) ஷைத்தான்கள் மீது தீப்பந்தங்கள் ஏவிவிடப்பட்டன. (ஒட்டுக் கேட்கச் சென்ற) அந்த ஷைத்தான்கள் (ஒரு செய்தியும் கிடைக்காமல் தம் தலைவர்களிடம்) திரும்பி வந்தன. அப்போது தலைவர்கள், “உங்களுக்கு என்ன நேர்ந்தது?” என்று கேட்டார்கள். ஷைத்தான்கள், “வானகத்துச் செய்திகளுக்கும் எங்களுக்குமிடையே திரையிடப்பட்டு விட்டது; எங்கள் மீது தீப்பந்தங்கள் ஏவி விடப்பட்டன” என்று பதிலளித்தனர். “புதியதொரு நிகழ்ச்சி ஏதேனும் சம்பவித்திருக்கும். அதுவே உங்களுக்கும் வானத்துச் செய்திகளுக்குமிடையே தடையாக அமைந்திருக்கவேண்டும். எனவே நீங்கள், பூமியின் கீழ்த்திசை, மேல்திசை (என நாலா பாகங்களிலும்) சென்று புதிதாகச் சம்பவித்துவிட்ட இந்த நிகழ்ச்சி என்னவென்று ஆராயுங்கள்” என்றனர். உடனே ஷைத்தான்கள் பூமியின்

கீழ்த்திசை, மேல்திசை எங்கும் பயணம் செய்து தங்களுக்கும் வானுலகச் செய்திகளுக்கும் இடையே தடுப்பாய் அமைந்த அந்த நிகழ்ச்சி என்னவென்று ஆராயலாயினர்.

'திஹாமா' எனும் (மக்கா) பகுதியை நோக்கி ஷைத்தான்கள் வந்தபோது 'உக்காழ்' சந்தையை நோக்கிச் சென்றுகொண்டிருந்த அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் 'நக்லா' எனுமிடத்தில் தம் தோழர்களுக்கு 'ஃபஜ்ரு'த் தொழுகையை முன்னின்று நடத்திக்கொண்டிருந்தார்கள்.அப்போது ஓதப்பட்ட குர்ஆன் வசனங்களை அந்த ஷைத்தான்கள் கேட்ட போது அதைக் கவனமாகச் செவிகொடுத்துக் கேட்டனர். அப்போது ஷைத்தான்கள் (தங்களுக்கிடையில்) "வானத்துச் செய்திகளை (கேட்கமுடியாமல்) உங்களைத் தடுத்தது இதுதான்" என்று கூறிவிட்டு, தம் கூட்டத்தாரிடம் சென்று, "எங்கள் கூட்டத்தாரே! திண்ணமாக நாங்கள் ஆச்சரியமானதொரு குர்ஆனை செவிமடுத்தோம். அது நேர் வழியைக் காட்டுகின்றது. எனவே நாங்கள் அதை விசுவாசித்தோம். எங்கள் இறைவனுக்கு (இனி) நாங்கள் ஒருபோதும் யாரையும் இணையாகக் கருதமாட்டோம்" என்று கூறினர். (இதையொட்டி) மாண்பும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ் தன் தூதருக்கு, "(நபியே!) நீர் கூறுக: வஹீ மூலம் எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளது: மெய்யாகவே ஜின்களில் சிலர் (இவ்வேதத்தைச்) செவியேற்றனர்..." என்று தொடங்கும் இந்த (72ஆவது) அத்தியாயத்தை அருளினான்.

ஜின்கள் (தம் கூட்டத்தாரிடம்) கூறியதைப் பற்றி 'வஹி'யின் மூலம்தான் நபி (ஸல்) அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (4921)**

திருக்குர்ஆன் வருவதற்கு முன்பு ஜின்கள் வானுலகச் செய்திகளை சுலபமாக ஒட்டுக்கேட்டு வந்தனர். நபி(ஸல்) அவர்கள் இறைத்தூதராக அனுப்பப்பட்டு திருக்குர்ஆன் அருளப்பட்டவுடன் ஜின்கள் சுலபமாக ஒட்டுக்கேட்க முடியாதவாறு தீப்பந்தங்களால் விரட்டப்பட்டனர். ஒட்டுக்கேட்பது குறைக்கப்பட்டு கடுமையாக்கப்பட்டது. உயிரை இழக்கத் துணிந்து ஜின்கள் மட்டுமே கடும் போராட்டத்திற்கு மத்தியில் ஒட்டுக்கேட்பதற்காக செல்கின்றனர்.

மக்கள் குறிகாரர்களிடம் சென்று அவர்கள் கூறுவதை உண்மை என நம்புகிறார்களா? என்று சோதிப்பதற்காக ஓரிரு விசயங்களை ஜின்கள் ஒட்டுக்கேட்டு குறிகாரனிடம் கூறும் நிலையை அல்லாஹ் ஏற்படுத்தியுள்ளான். சில நேரங்களில் குறிகாரன் கூறுவது உண்மைக்கு

ஒத்து இருந்தாலும் சரியான நம்பிக்கையுள்ளவர்கள் அவன் கூறுவதை ஏற்கமாட்டார்கள். சரியான நம்பிக்கை இல்லாதவர்கள் அவன் கூறும் ஓரிரு விசயங்களை நம்பி அவன் கூறும் அனைத்துப் பொய்களையும் உண்மை என நம்ப ஆரம்பித்துவிடுவர்.

எனவே குறிகாரர்களிடம் செல்வதும் அவர்களிடம் குறிகேட்பதும் இஸ்லாத்தில் வன்மையாக கண்டிக்கப்பட்டள்ளது. அவர்கள் கூறுவது உண்மை நம்புவதற்கு தடைவிதிக்கப்பட்டுள்ளது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள் :

ஒருவர் குறிகாரனிடம் சென்று அவன் கூறுவதை உண்மை என்று நம்பினால் அவர் முஹம்மதுக்கு அருளப்பட்ட(இஸ்லாத்)தை விட்டும் நீங்கிவிட்டார்.

**அறிவிப்பர் : அபூஹுரைரா (ரலி) அவர்கள் நூல் : அபூதாவுத் (3405)**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒருவர் சோதிடனிடம் சென்று, எதைப் பற்றியாவது கேட்டால், அ(வ்வாறு கேட்ட)வருடைய நாற்பது நாட்களின் தொழுகை அங்கீகரிக்கப்படுவதில்லை.

**அறிவிப்பவர் ; ஸஃபிய்யா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (4488)**

**ஜின்களை வசப்படுத்த முடியுமா?**

ஜின்களை வசப்படுத்த முடியும் என்று கூறி பலர் பொதுமக்களை ஏமாற்றி வருகிறார்கள். நாம் நினைக்கின்ற காரியங்களை ஜின்களால் செய்து கொள்ள முடியும் என்ற தவறான எண்ணம் தான் மக்கள் ஏமாறுவதற்குக் காரணமாகும்.

இறைவன் நமக்கு வழங்கிய அறிவைக் கொண்டு சிந்தித்துப் பார்த்தால் ஜின்களை மனிதனால் ஒருபோதும் வசப்படுத்த முடியவே முடியாது என்பதை சந்தேகமற புரியலாம்.

ஜின்கள் என்பவர்கள் மிருகங்களை போன்று பகுத்தறிவு வழங்கப்படாதவர்கள் இல்லை. மனிதர்களைப் போன்று பகுத்தறிவு வழங்கப்பட்டவர்களாவர். மனித ஆற்றலோடு ஜின்களுக்கு வழங்கப்பட்ட ஆற்றலை ஒப்பிட்டுப் பார்த்தால் ஜின்களின் ஆற்றல் பன்மடங்கு உயர்ந்ததும் வியக்கத்தக்கதுமாகும்.

மனிதனை விட வலுமையான படைப்பான ஜின்களை பலவீனமான மனிதனால் எப்படி கட்டுப்படுத்த முடியும் என்பதை யோசித்தால் ஜின்களை வசப்படுத்துவதாக கூறுவது வடிகட்டிய பொய் என்பதை அறியலாம்.

**சுமைலமான் நபிக்கு வழங்கப்பட்ட தனிச்சிறப்பு**

ஜின்களை மனிதர்களால் வசப்படுத்த முடியாது. இறைவன் சுலைமான் (அலை) அவர்களுக்கு மட்டுமே ஜின்களை வசப்படுத்திக் கொடுத்திருந்தான் என்று திருக்குர்ஆனும் திருநபி (ஸல்) அவர்களின் போதனையும் கூறுகிறது.

இறைவன் வசப்படுத்திக் கொடுத்த ஒரே காரணத்தால் தான் ஜின்கள் சுலைமான் நபிக்கு கட்டுப்பட்டு நடந்தன. இறைவன் வசப்படுத்தித் தராமல் சுயமாக ஜின்களை வசப்படுத்த முடியுமா என்றால் இது சுலைமான் (அலை) அவர்களாலும் முடியாது.

காற்றை வசப்படுத்துவது எறும்புகளின் பாஷையை அறிவது இதுவெல்லாம் எந்த மனிதனாலும் முடியாத காரியமாகும். ஆனால் இவற்றை இறைவன் சுலைமான் (அலை) அவர்களுக்கு மட்டும் வழங்கினான். சுலைமான் நபிக்கு ஜின்கள் கட்டுப்பட்டு நடந்ததும் இந்த அடிப்படையில் தான்.

"என் இறைவா! என்னை மன்னித்து விடு! எனக்குப் பின் யாருக்கும் கிடைக்காத ஆட்சியை எனக்கு வழங்கு! நீயே வள்ளல்" எனக் கூறினார். அவருக்குக் காற்றை வசப்படுத்திக் கொடுத்தோம். அவரது கட்டளைப் படி அவர் நினைத்தவாறு பணிந்து அது சென்றது.

ஷைத்தான்களில் கட்டடம் கட்டுவோரையும், முத்துக் குளிப்போரையும், விலங்கிடப்பட்ட வேறு சிலரையும் (அவருக்கு) வசப்படுத்திக் கொடுத்தோம். "இது நமது அருட்கொடை! கணக்கின்றி மற்றவருக்குக் கொடுக்கலாம்! அல்லது நீரே வைத்துக் கொள்ளலாம்!" (என்று கூறினோம்.)

**அல்குர்ஆன் (38 : 35.36.37.38.39)**

எனக்குப் பின் யாருக்கும் கிடைக்காத ஆட்சியை எனக்கு வழங்கு என்று சுலைமான் (அலை) பிரார்த்தனை செய்கிறார்கள். சுலைமான் (அலை) அவர்களுக்குப் பிறகு வேறு யாரருக்கும் ஜின்களை வசப்படுத்தும் ஆற்றலை அல்லாஹ் வழங்கவில்லை என்பதை அவர்கள் கேட்ட பிரார்த்தனை ஆணித்தரமாக விவரிக்கிறது.

**முஹம்மது (ஸல்) அவர்களால் கூட வசப்படுத்த முடியாது**

நபி (ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருந்த போது அவர்களின் தொழுகையை முறிப்பதற்காக ஜின் ஒன்று இடஞ்சல் கொடுத்தது. அந்த ஜின்னுடைய கெடுதலை களைவதற்காக அல்லாஹ் நபி (ஸல்) அவர்களுக்கு பிரத்யேக ஆற்றலை வழங்கினான். இந்த ஆற்றலின் மூலம் கெடுதல் செய்த ஜின்னை நபி (ஸல்) அவர்கள் அடக்கினார்கள்.

அதே நேரத்தில் எல்லோரும் காணுகின்ற வகையில் அந்த ஜின்னை கட்டி வைக்க அவர்கள் நாடிய போது சுலைமான் நபியவர்கள் கேட்ட பிரார்த்தனையை நினைவு கூறுகிறார்கள். எனவே ஜின்னை கட்டிப்போட்டு வசப்படுத்துவதற்கு முயற்சிக்காமல் அந்த ஜின்னை விட்டுவிடுகிறார்கள்.

(ஒருநாள்) நபி (ஸல்) அவர்கள், “நேற்றிரவு முரட்டு ஜின் ஒன்று என் தொழுகையை (இடையில்) துண்டிப்பதற்காக திடீரென்று வந்து நின்றது” என்றோ, அல்லது இதைப் போன்ற வார்த்தையையோ கூறினார்கள். பிறகு “அதன் மீது அல்லாஹ் எனக்கு சக்தியை வழங்கினான். நீங்கள் அனைவரும் காலையில் வந்து அதைக் காணும் வரை இந்த (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலின் தூண்களில் ஒன்றில் அதைக் கட்டிவைக்க நினைத்தேன். அப்போது “இறைவா! எனக்குப் பின் வேறு எவருக்கும் நீ வழங்காதே ஓர் ஆட்சியை எனக்கு நீ வழங்குவாயாக” (38:35) என்று என் சகோதரர் சுலைமான் (அலை) அவர்கள் செய்த வேண்டுதல் என் நினைவுக்கு வந்தது” என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (461)**

ஜின்னுடைய கெடுதலிலிருந்து காத்துக்கொள்கின்ற ஆற்றலை மட்டுமே அல்லாஹ் நபி (ஸல்) அவர்களுக்கு வழங்கினான். அல்லாஹ் இந்த ஆற்றலை வழங்காவிட்டால் நபி (ஸல்) அவர்களால் கூட இதை செய்திருக்க முடியாது.

ஜின்களை வைத்து காரியங்களை சாதிக்க முடியும் என்று வாதிடுபவர்களிடத்தில் சில கேள்விகளை கேட்பதன் மூலம் அவர்களின் ஏமாற்று வேலையை வெளிக்கொணரலாம். ஒரு பொருளை எடுத்து வருவது அல்லது ஒரு பொருளை வேறொரு இடத்திற்கு கொண்டு செல்வது இது போன்ற வேலைகளை ஜின்களால் செய்ய முடியும்.

இவர்களின் வாதம் உண்மையாக இருந்தால் ஜின்களின் உதவியால் நம் கையில் வைத்திருக்கும் பொருளை பறித்துச் செல்ல இவர்களால் முடியுமா? அல்லது நம் வீட்டில் உள்ள ஒரு பொருளை எந்த மனிதரின் உதவியும் இன்றி நமக்கெதிரே உட்கார்ந்துகொண்டு தீடீரென நம் கண்களுக்கு முன்னால் கொண்டு வர முடியுமா?

பாஸ்போர்ட் விசா விமானம் போன்றவை இல்லாமல் வெளிநாடுகளுக்கு ஜின்களின் உதவியால் நம்மை அழைத்துச் செல்ல முடியுமா? இது போன்ற கேள்விகளுக்கு இந்த ஏமாற்றுப் பேர்வளிகளிடத்தில் எந்த பதிலும் இல்லை.

தங்களின் தேவைகளை ஜின்களின் உதவியால் அடைந்துகொள்ள இயலாதவர்கள் ஜின்களின் உதவியால் நமது தேவைகளை எப்படி பூர்த்தி செய்ய முடியும். அற்பக்காசுகளை நம்மிடம் இவர்கள் எதிர்பார்ப்பதிலிருந்து இது மோசடி வியாபாரம் தான் என்பது தெளிவாகிறது.

## அல் ஜின்னு சூராவை ஓதினால் வசப்படுத்த முடியுமா?

குர்ஆனில் அல்ஜின்னு என்று ஒரு அத்தியாயம் உள்ளது. இந்த அத்தியாயத்தில் ஜின்களைப் பற்றிய விரிவான விளக்கம் கூறப்படுகிறது. இதை நாற்பது நாட்கள் தொடர்ந்து ஓதினால் ஓதியவருக்கு ஜின்கள் வசப்பட்டுவிடும் என்ற தவறான நம்பிக்கை பலரிடம் நிலவுகிறது.

இந்த நம்பிக்கை உண்மைக்குப் புறம்பானது என்பதற்கு மேலே நாம் சுட்டிக்காட்டிய விபரங்களே போதுமானதாகும். குர்ஆனில் ஜின் என்று அத்தியாயம் இருப்பதை போலவே அந்நாஸ் (மனிதர்கள்) என்ற அத்தியாயமும் இடம்பெற்றுள்ளது. அந்நம்லு (எறும்பு) என்ற அத்தியாயமும் அல்பகரா (பசு மாடு) என்ற அத்தியாயமும் அல்ஃபீல் (யானை) என்ற அத்தியாயமும் இடம்பெற்றுள்ளது.

ஜின் அத்தியாயத்தை ஓதுவதால் ஜின்னை வசப்படுத்த முடியும் என்பது உண்மையாக இருந்தால் அந்நாஸ் (மனிதர்கள்) என்ற அத்தியாயத்தை ஓதி மனிதர்களை வசப்படுத்த முடியுமா? அந்நம்லு (எறும்பு) என்ற அத்தியாயத்தை ஓதுவதால் எறும்பை வசப்படுத்த முடியுமா? அல்பகரா (பசுமாடு) என்ற அத்தியாயத்தை ஓதி பசுமாட்டை வசப்படுத்த முடியுமா? அல்ஃபீல் (யானை) என்ற அத்தியாயத்தை ஓதுவதால் யானை நமக்கு வசப்படுமா? இது அறிவற்ற வாதம் என்பதை இக்கேள்விகள் உணர்த்திக்கொண்டிருக்கிறது.

## ஜின்களுக்கு மறைவான ஞானம் கிடையாது

ஜின்கள் மகத்தான் ஆற்றல் உள்ள படைப்பாக இருந்தாலும் மறைவான விஷயங்களை அறிந்து கொள்வதில் மனிதர்களைப் போன்று பலவீனமானப் படைப்பாகும்.

மறைவான ஞானம் என்பது இறைவனுக்கு மட்டும் உரித்தான அம்சமாகும். இந்த அதிகாரத்தை இறைவன் மனிதர்களுக்கும் ஜின்களுக்கும் வழங்கவில்லை. இறைவனுடைய தன்மைகளில் ஒன்றான மறைவானவற்றை அறியும் ஆற்றல் ஜின்களுக்கு இருப்பதாக ஒருவர் நம்பினால் அவர் இணைவைத்தவராக ஆகிவிடுவார்.

“வானங்களிலும் பூமியிலும் மறைவானதை அல்லாஹ்வைத் தவிர யாரும் அறிய மாட்டார்கள். தாங்கள் எப்போது உயிர்ப்பிக்கப்படுவோம் என்பதையும் அவர்கள் அறிய மாட்டார்கள்” என்று கூறுவீராக! **அல்குர்ஆன் (27 : 65)**

மறைவான ஞானம் தங்களுக்கு இல்லை என்று ஜின்கள் கூறியதை திருக்குர்ஆன் எடுத்துக்கூறுகிறது.

பூமியில் உள்ளவர்களுக்குக் கெடுதி நாடப்பட்டுள்ளதா? அல்லது அவர்களின் இறைவன் அவர்களுக்கு நேர் வழியை நாடியிருக்கிறானா? என்பதை அறிய மாட்டோம்.

**அல்குர்ஆன் (72 : 10)**

ஸுலைமான் நபிக்குப் பயந்து கொண்டு பைத்துல் முகத்தஸைக் கட்டும் பணியில் ஜின்கள் மும்முறமாக ஈடுபட்டிருந்தார்கள். ஸுலைமான் நபி நின்ற நிலையிலேயே இறந்து விட்டார். ஆனாலும் கைத்தடியை ஊன்றிக் கொண்டிருந்ததால் அவர் கீழே விழாமல் அப்படியே நின்றார்.

பிறகு கைத் தடியைக் கறையான்கள் அரித்த போது, அவரது உடல் கீழே விழுந்தது. அவர் விழுந்த பிறகு தான் ஸுலைமான் இறந்து நீண்ட காலமாகிவிட்டது என்ற செய்தி ஜின்களுக்குத் தெரிகிறது.

தங்களுக்கு அருகில் நின்று கொண்டிருக்கின்ற ஸுலைமான் நபி மரணித்துவிட்டதைக் கூட ஜின்களால் கண்டுபிடிக்க இயலவில்லை.

அவருக்கு நாம் மரணத்தை ஏற்படுத்திய போது பூமியில் ஊர்ந்து செல்லும் உயிரினம் (கரையான்) தான் அவரது மரணத்தைக் காட்டிக் கொடுத்தது. அது அவரது கைத்தடியைச் சாப்பிட்டது. அவர் கீழே விழுந்ததும் ''நமக்கு மறைவானவை தெரிந்திருந்தால் இழிவு தரும் இத்துன்பத்தில் இருந்திருக்க மாட்டோமே'' என்பதை ஜின்கள் விளங்கிக் கொண்டன.

**அல்குர்ஆன் (34 : 14)**

மறைவானவற்றை அறிகின்ற ஆற்றல் ஜின்களுக்கு இல்லாத காரணத்தால் வானுலகத்தில் பேசப்படுகின்ற விஷயங்களை ஒட்டுக்கேட்கும் செயலில் ஜின்கள் ஈடுபட்டன. ஜின்களுக்கு மறைவான ஞானம் இருந்திருந்தால் ஒட்டுக்கேட்கின்ற அவசியம் அவர்களுக்கு ஏற்படாது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : வானவர்கள் மேகத்தில் இறங்கி விண்ணில் தீர்மானிக்கப்பட்ட விஷயத்தைப் (பற்றிப்) பேசிக் கொள்கிறார்கள். ஷைத்தான்கள் அதைத் திருட்டுத் தனமாக (ஒளிந்திருந்து) ஒட்டுக் கேட்டு, சோதிடர்களுக்கு அதை அறிவித்து விடுகின்றன. சோதிடர்கள் அதனுடன் (அந்த உண்மையுடன்) நூறு பொய்களைத் தம் தரப்பிலிருந்து புனைந்து (சேர்த்துக்) கூறுவார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (3210)**

## இஸ்லாத்தை ஜின்களும் கடைபிடிக்க வேண்டும்

இஸ்லாம் என்ற நேர்வழி மனித குலத்திற்கு மாத்திரம் உரியதல்ல. மாறாக மனிதர்களைப் போன்று பகுத்தறிவு வழங்கப்பட்ட ஜின்களும் இஸ்லாத்தை ஏற்று நடக்க வலியுறுத்தப்பட்டிருக்கிறார்கள்.

ஜின்கள் இறைவனை ஈமான் கொள்வதாகவும் ஜின்களில் பலர் முஸ்லிம்களாக இருப்பதாகவும் ஜின்கள் கூறியதை குர்ஆன் எடுத்துரைக்கிறது.

ஜின்களில் ஒரு கூட்டத்தார் செவியுற்று 'நாங்கள் ஆச்சரியமான குர்ஆனைச் செவியுற்றோம்' எனக் கூறியதாக எனக்கு அறிவிக்கப்பட்டது" என (முஹம்மதே!) கூறுவீராக!

அது நேர் வழியைக் காட்டுகிறது. எனவே அதை நம்பினோம். எங்கள் இறைவனுக்கு எவரையும் இணையாக்க மாட்டோம். எங்கள் இறைவனின் மகத்துவம் உயர்ந்தது. அவன் மனைவியையோ, பிள்ளைகளையோ ஏற்படுத்திக் கொள்ளவில்லை.

**அல்குர்ஆன் (72 : 1.2.3)**

நேர் வழியை செவியுற்ற போது அதை நம்பினோம். தமது இறைவனை நம்புகிறவர் நஷ்டத்தையும், அநீதி இழைக்கப்படுவதையும் அஞ்ச மாட்டார்.

நம்மில் முஸ்லிம்களும் உள்ளனர். அநீதி இழைத்தோரும் உள்ளனர். இஸ்லாத்தை ஏற்போர் நேர் வழியைத் தேடிக் கொண்டனர். அநீதி இழைத்தோர் நரகத்திற்கு விறகுகளாக ஆனார்கள். (என்று ஜின்கள் கூறின)

**அல்குர்ஆன் (72 : 13.14.15)**

பாம்பு வடிவில் உள்ள சில ஜின்கள் இஸ்லாத்தை தழுவியிருப்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மதீனாவில் இஸ்லாத்தைத் தழுவிய ஜின்கள் சில உள்ளன. உங்களில் ஒருவர், அவற்றில் எதையேனும் இந்தக் குடியிருப்புகளில் (பாம்பின் உருவில்) கண்டால் மூன்று நாட்கள் அவற்றுக்கு அவர் அறிவிப்புச் செய்யட்டும். அதற்குப் பின்னரும் அது அவருக்குத் தென்பட்டால், அதைக் கொன்றுவிடட்டும்! ஏனெனில், அது ஷைத்தான் ஆகும்.

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : முஸ்லிம் (4504)**

## ஜின்களுக்கும் இறைத்தூதர்கள் அனுப்பப்பட்டுள்ளனர்

மனிதர்களையும் மனிதர்களைப் போன்ற இன்னொரு படைப்பான ஜின்களையும் நல்வழிப்படுத்துவதற்காக இறைத்தூதர்கள் அனுப்பப்பட்டிருக்கிறார்கள் என்று திருக்குர்ஆன் கூறுகிறது.

ஜின் மற்றும் மனித சமுதாயமே! "உங்களுக்கு என் வசனங்களை எடுத்துக் கூறி இந்த நாளை நீங்கள் சந்திக்க விருப்பதை உங்களுக்கு எச்சரிக்கை செய்யும் தூதர்கள் உங்களில்

இருந்து உங்களிடம் வரவில்லையா?” (என்று இறைவன் கேட்பான்). “எங்களுக்கு எதிராக நாங்களே சாட்சி கூறுகிறோம்” என்று அவர்கள் கூறுவார்கள். இவ்வுலக வாழ்வு அவர்களை மயக்கி விட்டது. (ஏக இறைவனை) மறுத்தோராக இருந்தோம் எனத் தங்களுக்கு எதிராக அவர்கள் சாட்சியமளிப்பார்கள்.

**அல்குர்ஆன் (6 : 130)**

**முஹம்மத் (ஸல்) அவர்களை பின்பற்றுவது ஜின்களின் மீது கடமையாகும்**

நபி (ஸல்) அவர்கள் உலக மக்களுக்கு இறைத்தூராக இருப்பது போன்று ஜின்களுக்கும் அவர்கள் இறைத்தூதராவார்கள். நபி (ஸல்) அவர்களை இறைத்தூதராக ஏற்று அவர்கள் காட்டித் தந்த வழியை கடைபிடிப்பது ஜின்களின் மீது கடமையாகும். இதை பின்வரும் வசனங்களில் அறியலாம்.

“எங்கள் சமுதாயமே! அல்லாஹ்வின் அழைப்பாளருக்குப் பதிலளியுங்கள். அவரை நம்புங்கள்! அவன் உங்களுக்கு உங்கள் பாவங்களை மன்னிப்பான். துன்புறுத்தும் வேதனையிலிருந்து உங்களைக் காப்பாற்றுவான்.

அல்லாஹ்வின் அழைப்பாளருக்கு பதிலளிக்காதவர் பூமியில் அல்லாஹ்வை வெல்பவராக இல்லை. அவனன்றி அவருக்குப் பாதுகாவலர்களும் இல்லை. அவர்கள் தெளிவான வழி கேட்டிலேயே உள்ளனர்” (என்றும் ஜின்கள் கூறின.)

**அல்குர்ஆன் (46 : 31)**

நபி (ஸல்) அவர்கள் ஜின்களிடம் சென்று இஸ்லாத்தை போதித்துள்ளார்கள்.

நான் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களிடம், “ஜின்களின் இரவில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் உங்களில் யாராவது இருந்தீர்களா?” என்று கேட்டேன். அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள்: இல்லை; ஆனால், ஒரு நாள் இரவு நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தபோது திடீரென அவர்களைக் காணவில்லை. எனவே, பள்ளத்தாக்குகளிலும் மலைக் கணவாய்களிலும் அவர்களைத் தேடிப்பார்த்தோம். (அவர்கள் அங்கு கிடைக்காமல் போகவே) ‘ஜின் அவர்களைத் தூக்கிச் சென்றிருக்கும்; அல்லது மர்மமான முறையில் அவர்கள் கொல்லப்பட்டிருப்பார்கள்’ என்று நாங்கள் பேசிக்கொண்டோம். பின்னர் அன்றைய மோசமான இரவை (ஒரு வழியாக)க் கழித்தோம்.

அதிகாலையில் நபி (ஸல்) அவர்கள் 'ஹிரா' மலைக் குன்றின் திசையிலிருந்து வந்து கொண்டிருந்தார்கள். உடனே நாங்கள் "அல்லாஹ்வின் தூதரே! உங்களைக் காணாமல் நாங்கள் தேடினோம். நீங்கள் கிடைக்காமல்போகவே அந்த மோசமான இரவை (ஒருவாறு) கழித்தோம்" என்று கூறினோம். அப்போது நபி (ஸல்) அவர்கள், "ஜின்களில் ஒருவர் என்னை அழைக்க வந்தார். எனவே அவருடன் சென்று ஜின்களுக்குக் குர்ஆனை ஓதிக் காட்டினேன்" என்று கூறினார்கள். பிறகு எங்களை அழைத்துச் சென்று ஜின்கள் விட்டுச்சென்ற அடையாளங்களையும் அவர்கள் பயன்படுத்திய நெருப்பின் தடயத்தையும் காட்டினார்கள்.

**அறிவிப்பவர் : அல்கமா (ரஹ்)**

**நூல் : முஸ்லிம் (767)**

### ஜின்கள் குர்ஆனை செவியுற்றன

திருக்குர்ஆன் மனித குலத்திற்கும் ஜின் இனத்திற்கும் நேர்வழி காட்டியாக அருளப்பட்டதாகும். திருக்குர்ஆன் ஜின்களுக்கும் இறைவேதம் என்பதால் ஜின்கள் குர்ஆனை நம்புவதும் அதன் அடிப்படையில் செயல்படுவதும் அவர்களின் மீது கடமையாகும்.

ஜின்களில் ஒரு கூட்டத்தார் செவியுற்று 'நாங்கள் ஆச்சரியமான குர்ஆனைச் செவி யுற்றோம்' எனக் கூறியதாக எனக்கு அறிவிக் கப்பட்டது" என (முஹம்மதே!) கூறுவீராக!

**அல்குர்ஆன் (72 : 1)**

(முஹம்மதே!) இக்குர்அனை செவியுறுவதற்காக ஜின்களில் ஒரு கூட்டத்தினரை உம்மிடம் நாம் அனுப்பியதை எண்ணிப் பார்ப்பீராக! அவை அவரிடம் வந்த போது "வாயை மூடுங்கள்!" என்று கூறின. (ஓதி) முடிக்ககபட்ட போது எச்சரிப்போராக தமது சமுதாயத்திடம் திரும்பின.

"எங்கள் சமுதாயமே! மூஸாவுக்குப் பின் அருளப்பட்ட ஒரு வேதத்தை நாங்கள் செவியுற்றோம். அது தனக்கு முன் சென்றதை உண்மைப்படுத்துகிறது. உண்மைக்கும் நேரான பாதைக்கும் அது வழி காட்டுகிறது" எனக் கூறின.

**அல்குர்ன் (46 : 29)**

'திஹாமா' எனும் (மக்கா) பகுதியை நோக்கி ஷைத்தான்கள் வந்தபோது 'உக்காழ்' சந்தையை நோக்கிச் சென்றுகொண்டிருந்த அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் 'நக்லா' எனுமிடத்தில் தம் தோழர்களுக்கு 'ஃபஜ்ரு'த் தொழுகையை முன்னின்று

நடத்திக்கொண்டிருந்தார்கள்.அப்போது ஓதப்பட்ட குர்ஆன் வசனங்களை அந்த ஷைத்தான்கள் கேட்ட போது அதைக் கவனமாகச் செவிகொடுத்துக் கேட்டனர். அப்போது ஷைத்தான்கள் (தங்களுக்கிடையில்) "வானத்துச் செய்திகளை (கேட்கமுடியாமல்) உங்களைத் தடுத்தது இதுதான்" என்று கூறிவிட்டு, தம் கூட்டத்தாரிடம் சென்று, "எங்கள் கூட்டத்தாரே! திண்ணமாக நாங்கள் ஆச்சரியமானதொரு குர்ஆனை செவிமடுத்தோம். அது நேர் வழியைக் காட்டுகின்றது. எனவே நாங்கள் அதை விசுவாசித்தோம். எங்கள் இறைவனுக்கு (இனி) நாங்கள் ஒருபோதும் யாரையும் இணையாகக் கருதமாட்டோம்" என்று கூறினர். (இதையொட்டி) மாண்பும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ் தன் தூதருக்கு, "(நபியே!) நீர் கூறுக: வஹீ மூலம் எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளது: மெய்யாகவே ஜின்களில் சிலர் (இவ்வேதத்தைச்) செவியேற்றனர்..." என்று தொடங்கும் இந்த (72ஆவது) அத்தியாயத்தை அருளினான்.

ஜின்கள் (தம் கூட்டத்தாரிடம்) கூறியதைப் பற்றி 'வஹி'யின் மூலம்தான் நபி (ஸல்) அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (4921)**

**ஜின்களுக்கும் வணக்க வழிபாடுகள் உண்டு**

இறைவனை வணங்கி வழிபடுவது ஜின்களின் மீதும் கடமையாகும்.

ஜின்னையும், மனிதனையும் என்னை வணங்குவதற்காகவே தவிர (வேறு எதற்காகவும்) நான் படைக்கவில்லை.

**அல்குர்ஆன் (51 : 56)**

நபி (ஸல்) அவர்கள் (53ஆவது அத்தியாயமான) 'அந்நஜ்ம்' அத்தியாயத்தை ஓதி (ஓதலுக்கான) சஜ்தாச் செய்தார்கள். அவர்களுடன் இருந்த முஸ்ம்களும் இணைவைப்பாளர்களும் ஏனைய மக்களும் ஜின்களும் சஜ்தாச் செய்தனர்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (1071)**

பிரார்த்தனை என்ற வணக்கத்தை ஜின்களும் செய்கின்றன. இதை பின்வரும் ஹதீஸிலிருந்து விளங்கலாம்.

நபி (ஸல்) அவர்கள் வளமும் உயர்வும் மிக்க அல்லாஹ் பின்வருமாறு கூறியதாக அறிவித்தார்கள் : என் அடியார்களே! உங்களில் முற்காலத்தார், பிற்காலத்தார், மனிதர்கள், ஜின்கள் ஆகிய அனைவரும் சேர்ந்து ஒரே திறந்த வெளியில் நின்று என்னிடத்தில் (தத்தம் தேவைகளைக்) கோரினாலும் ஒவ்வொரு மனிதருக்கும் அவர் கேட்பதை நான் கொடுப்பேன். அது என்னிடத்தில் இருப்பவற்றில் எதையும் குறைத்துவிடுவதில்லை; கடலில் நுழை(த்து எடு)க்கப்பட்ட ஊசி (தண்ணீரைக்) குறைப்பதைப் போன்றே தவிர (குறைக்காது)!

**அறிவிப்பவர் : அபூதர் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (5033)**

## மனிதர்களைப் போலவே ஜின்களுக்கும் கட்டளைகள் உள்ளன

"இக்குர்ஆன் போன்றதைக் கொண்டு வருவதற்காக மனிதர்களும், ஜின்களும் ஒன்று திரண்டாலும் இது போன்றதைக் கொண்டு வர முடியாது. அவர்களில் ஒருவர் மற்றவருக்கு உதவியாளராக இருந்தாலும் சரியே" என்று கூறுவீராக! **அல்குர்ஆன் (17 : 88)**

மனித ஜின் கூட்டமே! வானங்கள் மற்றும் பூமியின் விளிம்புகளைக் கடந்து செல்ல நீங்கள் சக்தி பெற்றால் கடந்து செல்லுங்கள்! ஆற்றல் மூலம் தவிர நீங்கள் கடந்து செல்ல மாட்டீர்கள்.

**அல்குர்ஆன் (55 : 33)**

## நல்ல ஜின்களும் கெட்ட ஜின்களும்

மனிதர்களில் நல்லவர்களும் கெட்டவர்களும் இருப்பதைப் போன்று ஜின்களிலும் நல்வர்கள் தீயவர்கள் உண்டு. இதை பின்வரும் ஆதாரங்களிலிருந்து அறியலாம்.

நம்மில் நல்லோரும் உள்ளனர். அவ்வாறு இல்லாதோரும் உள்ளனர். பல வழிகளில் சிதறிக் கிடந்தோம் (என்று ஜின்கள் கூறின).

**அல்குர்ஆன் (72 : 11)**

எங்களில் மூடன் அல்லாஹ்வின் மீது பொய்யைக் கூறுபவனாக இருந்தான். "மனிதர்களும், ஜின்களும் அல்லாஹ்வின் மீது பொய் கூறவே மாட்டார்கள்" என்று எண்ணிக் கொண்டிருந்தோம். (என்று ஜின்கள் கூறியது)

**அல்குர்ஆன் (72 : 4)**

இவர்களுக்குத் தோழர்களை நியமித்துள்ளோம். இவர்களுக்கு முன்னேயும், பின்னேயும் உள்ளதை அவர்கள் அழகாக்கிக் காட்டுகின்றனர். எனவே இவர்களுக்கு முன் சென்று விட்ட ஜின்கள் மற்றும் மனிதர்களில் உள்ள (தீய) கூட்டங்களுடன் சேர்த்து இவர்களுக்கு எதிராகவும் கட்டளை உறுதியாகி விட்டது. இவர்கள் நஷ்டமடைந்தோராகி விட்டனர்.

**அல்குர்ஆன் (41 : 25)**

நபி (ஸல்) அவர்கள் வளமும் உயர்வும் மிக்க அல்லாஹ் பின்வருமாறு கூறியதாக அறிவித்தார்கள் : என் அடியார்களே! உங்களில் முற்காலத்தார், பிற்காலத்தார், மனிதர்கள், ஜின்கள் ஆகிய அனைவரும் உங்களில் மிகவும் இறையச்சமுடைய ஒரு மனிதரைப் போன்று மாறிவிட்டாலும் அது எனது ஆட்சியில் எதையும் அதிகமாக்கி விடுவதில்லை.

என் அடியார்களே! உங்களில் முற்காலத்தார், பிற்காலத்தார், மனிதர்கள், ஜின்கள் ஆகிய அனைவரும் மிகவும் தீய மனிதர் ஒருவரைப் போன்று மாறிவிட்டாலும் அது எனது ஆட்சியில் எதையும் குறைத்துவிடப்போவதில்லை. **அறிவிப்பவர் : அபூதர் (ரலி) நூல் : முஸ்லிம் (5033)**

**ஜின்களில் இறைமறுப்பாளர்கள் உண்டு**

ஜின்களில் இறைவனை நம்பியோரும் இறைவனை நிராகரிப்பவர்களும் உண்டு. இந்த உலகத்தில் இறைமறுத்தோராக இருந்தோம் என்று கெட்ட ஜின்கள் மறுமை நாளில் தங்களுக்கு எதிராக சாட்சி கூறும்.

ஜின் மற்றும் மனித சமுதாயமே! "உங்களுக்கு என் வசனங்களை எடுத்துக் கூறி இந்த நாளை நீங்கள் சந்திக்க விருப்பதை உங்களுக்கு எச்சரிக்கை செய்யும் தூதர்கள் உங்களில் இருந்து உங்களிடம் வரவில்லையா?" (என்று இறைவன் கேட்பான்). "எங்களுக்கு எதிராக நாங்களே சாட்சி கூறுகிறோம்" என்று அவர்கள் கூறுவார்கள். இவ்வுலக வாழ்வு அவர்களை மயக்கி விட்டது. (ஏக இறைவனை) மறுத்தோராக இருந்தோம் எனத் தங்களுக்கு எதிராக அவர்கள் சாட்சியமளிப்பார்கள். **அல்குர்ஆன் (6 : 130)**

## இறைத்தூதர்களுக்கு எதிரிகள்

தீய மனிதர்கள் இறைத்தூதர்களுக்கு துயரங்களையும் துன்பங்களையும் கொடுத்தது போல் கெட்ட ஜின்களும் இறைத்தூதர்களுக்கு இடஞ்சல்களை கொடுத்துள்ளனர்.

இவ்வாறே மனிதர்களிலும், ஜின்களிலும் உள்ள ஷைத்தான்களை ஒவ்வொரு நபிக்கும் பகைவர்களாக ஆக்கினோம். ஏமாற்றுவதற்காக கவர்ச்சிகரமான சொற்களை அவர்களில் ஒருவர் மற்றவருக்கு அறிவிக்கின்றனர். (முஹம்மதே) உமது இறைவன் நாடியிருந்தால் அவர்கள் இதைச் செய்திருக்க மாட்டார்கள். அவர்கள் இட்டுக் கட்டுவதோடு அவர்களை விட்டு விடுவீராக!

**அல்குர்ஆன் (6 : 112)**

நபி (ஸல்) அவர்களின் தொழுகையை பாழ்படுத்துவதற்காக ஒரு கெட்ட ஜின் ஒன்று முயற்சித்தது.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : பலம் பொருந்திய ஜின் ஒன்று நேற்றிரவு என் தொழுகையை (இடையில்) துண்டிப்பதற்காக திடீரென்று வந்து நின்றது. அல்லாஹ் எனக்கு அதை வசப்படுத்தித் தந்தான். நான் அதைப் பிடித்துக் கொண்டேன். நீங்கள் ஒவ்வொருவரும் அதைப் பார்ப்பதற்காக அதைப் பள்ளிவாசலின் தூண்களில் ஒன்றில் கட்டி வைக்க விரும்பினேன். அப்போது, என் சகோதரர் சுலைமான் (அலை) அவர்கள் செய்த, “என் இறைவா! எனக்குப் பின் வேறெவருக்கும் கிடைக்காத ஓர் அதிகாரத்தை எனக்கு வழங்குவாயாக!” (38:35) என்னும் பிரார்த்தனையை நினைவு கூர்ந்தேன். உடனே, அதைச் சபித்து எறியப்பட்டதாகத் திருப்பியனுப்பி விட்டேன்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (3423)**

## ஜின்களுக்கும் விசாரணை உண்டு

உலகத்தில் வாழும் போது ஜின்கள் செய்த குற்றங்களுக்கு மறுமையில் அல்லாஹ் விசாரனை செய்வான்.

ஜின்களுக்கும், அவனுக்குமிடையே வம்சாவளி உறவை அவர்கள் கற்பனை செய்து விட்டனர். தாம் (இறை வன் முன்) நிறுத்தப்படுவோம் என்பதை ஜின்கள் அறிந்து வைத்துள்ளன.

**அல்குர்ஆன் (37 : 158)**

அந்நாளில் எந்த மனிதனிடமும், ஜின்னிடமும் அவரது குற்றம் குறித்து விசாரிக்கத் தேவை இருக்காது.

**அல்குர்ஆன் (55 : 39)**

### கெட்ட ஜின்களுக்கு நரகம் உண்டு

மனிதர்களில் குற்றம்புரிந்தவர்கள் மறுமையில் தண்டிக்கப்படுவதை போல் ஜின்களில் கெட்டவர்களும் தண்டிக்கப்படுவார்கள். உலகில் செய்த பாவங்களுக்காக நரக வேதனையை சுவைப்பார்கள்.

“உங்களுக்கு முன் சென்று விட்ட சமுதாயங்களான ஜின்கள் மற்றும் மனிதர்களுடன் நீங்களும் நரகத்தில் நுழையுங்கள்!” என்று (அவன்) கூறுவான்.

**அல்குர்ஆன் (7 : 38)**

ஜின்களிலும், மனிதர்களிலும் நரகத்திற்காகவே பலரைப் படைத்துள்ளோம்.

**அல்குர்ஆன் (7 : 179)**

மனிதர்கள் மற்றும் ஜின்கள் அனைவராலும் நரகத்தை நிரப்புவேன் என்ற உமது இறைவனின் வாக்கு முழுமையாகி விட்டது.

**அல்குர்ஆன் (11 : 119)**

நாம் நினைத்திருந்தால் ஒவ்வொருவருக்கும் அவருக்கான நேர் வழியைக் கொடுத்திருப்போம். மாறாக “அனைத்து மனிதர்களாலும், ஜின்களாலும் நரகத்தை நிரப்புவேன்” என்று என்னிடமிருந்து சொல் முந்தி விட்டது.

**அல்குர்ஆன் (32 : 13)**

மனித ஜின் கூட்டங்களைப் பார்த்து நரகத்தை அல்லாஹ் எச்சரிக்கிறான்.

குற்றவாளிகள் அவர்களின் அடையாளத்தால் அறியப்படுவார்கள். முன் நெற்றிகளும், பாதங்களும் பிடிக்கப்படும். உங்கள் இறைவனின் அருட் கொடைகளில் எதனைப் பொய்யெனக் கருதுகின்றீர்கள்?

குற்றவாளிகள் பொய்யெனக் கருதிக் கொண்டிருந்த நரகம் இதுவே. அதற்கும், கொதி நீருக்குமிடையே அவர்கள் உழல்வார்கள். உங்கள் இறைவனின் அருட் கொடைகளில் எதனைப் பொய்யெனக் கருதுகிறீர்கள்?

**அல்குர்ஆன் (55 : 41.42.43.44.45)**

நெருப்பால் படைக்கப்பட்டவர்களை நெருப்பால் தண்டிக்க முடியுமா? என்ற சந்தேகம் கூட சிலருக்கு எழலாம்.

மண்ணால் படைக்கப்பட்ட மனிதன் மண் கற்களால் அடிக்கப்படும் போது மனிதன் வேதனைக்குள்ளாகிறான். இது போன்று மறுமையில் கெட்ட ஜின்களும் நெருப்பால் தண்டிக்கப்படுவார்கள் என்று நம்புவது பாரதூரமான விஷயமில்லை.

வானுலக விஷயங்களை ஒட்டுக்கேட்பதற்காக ஜின்கள் முயற்சிக்கும் போது தீப்பந்தங்கள் அவர்களை விரட்டிச் சென்று கரித்துவிடும் என்ற தகவலை முன்பே பார்த்தோம். நெருப்பால் படைக்கப்பட்ட ஜின்களுக்கு நெருப்பு வேதனையை தரும் என்பதை இதன் மூலம் அறியலாம்.

## நல்ல ஜின்களுக்கு சொர்க்கம் உண்டு

இறைவனுக்கு கட்டுப்பட்டு நல்லவர்களாக வாழ்ந்த ஜின்கள் சொர்க்கம் புகுவார்கள்.

நேர் வழியை செவியுற்ற போது அதை நம்பினோம். தமது இறைவனை நம்புகிறவர் நஷ்டத்தையும், அநீதி இழைக்கப்படுவதையும் அஞ்சமாட்டார்.

நம்மில் முஸ்லிம்களும் உள்ளனர். அநீதி இழைத்தோரும் உள்ளனர். இஸ்லாத்தை ஏற்போர் நேர் வழியைத் தேடிக் கொண்டனர். அநீதி இழைத்தோர் நரகத்திற்கு விறகுகளாக ஆனார்கள். (என்று ஜின்கள் கூறின)

**அல்குர்ஆன் (72 : 13.14.15)**

நல்லவர்களாக வாழ்ந்தவர்களுக்கு சொர்க்கம் இருப்பதாக மனித ஜின் கூட்டத்தார்களை நோக்கி அல்லாஹ் நற்செய்தி கூறுகிறான்.

தமது இறைவன் முன் நிற்பதை அஞ்சியவருக்கு இரண்டு சொர்க்கச் சோலைகள் உள்ளன. உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனைப் பொய்யெனக் கருதுகிறீர்கள்? அவை

அடர்த்தியான கிளைகளைக் கொண்டவை. உங்கள் இறைவனின் அருட் கொடைகளில் எதனைப் பொய்யெனக் கருதுகிறீர்கள்? அவ்விரண்டிலும் இரண்டு ஊற்றுகள் பீறிட்டு ஓடும்.

**அல்குர்ஆன் (55 : 46.47.48.49.50)**

### ஜின்கள் மனிதர்களுக்கு நன்மை செய்யுமா?

ஜின்களால் மனிதர்களுக்கு இந்த உலகத்தில் நன்மை ஏற்படும் என்று கூறுவதற்கு ஏற்கதக்க ஆதாரங்கள் எதுவும் இல்லை. உலகத்தில் பாங்கு சொன்னவருக்கு சாதகமாக ஜின்கள் மறுமையில் சாட்சி கூறும் என்று ஹதீஸில் உள்ளது.

அப்துல்லாஹ் பின் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் என்னிடம், “ஆட்டையும் பாலைவனத்தையும் விரும்புபவராக உங்களை நான் காண்கிறேன். நீங்கள் ஆட்டை மேய்த்துக் கொண்டோ, அல்லது பாலைவனத்திலோ இருக்க (தொழுகை நேரம் வந்து) நீங்கள் தொழுகைக்காக அழைப்புக் கொடுப்பீர்களாயின் உங்கள் குரலை உயர்த்தி அழையுங்கள். ஏனெனில், தொழுகைக்காக அழைப்பவரின் குரல் ஒலிக்கும் தொலைவு நெடுகவுள்ள ஜின்களும், மனிதர்களும், பிற பொருள்களும் அதைக் கேட்டு அவருக்காக மறுமை நாளில் சாட்சி சொல்கின்றன” என்று கூறிவிட்டு, “இதை நான் அல்லாஹ்வின் தூதரிடமிருந்து கேட்டேன்” என்று சொன்னார்கள்.

**நூல் : புகாரி (3296)**

### ஜின்கள் சுலைமான் நபிக்கு உதவியாக இருந்தன

இறைவனுடைய கட்டளையின் காரணமாக ஜின்கள் சுலைமான் நபிக்கு கட்டுப்பட்டு உதவியாக இருந்தன.

ஸுலைமானுக்குக் காற்றை வசப்படுத்தினோம். அதன் புறப்பாடு ஒரு மாதமாகும். அதன் திரும்புதல் ஒரு மாதமாகும். அவருக்காக செம்பு ஊற்றை ஓடச் செய்தோம். தனது இறைவனின் விருப்பப்படி அவரிடம் பணியாற்றும் ஜின்களும் இருந்தனர். அவர்களில் நமது கட்டளையை யாரேனும் புறக்கணித்தால் நரகின் வேதனையை அவருக்கு சுவைக்கச் செய்வோம். அவர் விரும்பிய போர்க்கருவிகளையும், சிற்பங்களையும், தடாகங்களைப் போன்ற கொப்பரைகளையும், நகர்த்த முடியாத பாத்திரங்களையும், அவருக்காக ஜின்கள் செய்தன.

**அல்குர்ஆன் (34 : 12)**

ஜின்கள், மனிதர்கள், பறவைகள் ஆகியவற்றின் படைகள் ஸுலைமானுக்காகத் திரட்டப்பட்டு, அவர்கள் அணி வகுக்கப்பட்டனர்.

**அல்குர்ஆன் (27 : 17)**

## ஜின்களிடம் உதவி தேடலாமா?

ஜின்களால் இந்த உலகத்தில் எந்த நன்மையும் நமக்கு ஏற்படுவதில்லை. நேரடியாக பார்த்து உதவி கோருவதற்கு அவை நம் கண்களுக்கு புலப்படுவதுமில்லை. கண்ணில் காணாமல் சப்தமின்றி பிரார்த்தனை செய்வதற்கு அல்லாஹ் ஒருவன் மட்டுமே தகுதிவாய்ந்தவன்.

ஜின்களிடம் உதவி கேட்குமாறு நபி (ஸல்) அவர்கள் நமக்குக் கற்றுத்தரவில்லை. மக்கத்து காஃபிர்கள் ஜின்களிடம் உதவி கேட்டதால் இணைவைப்பில் அவர்கள் விழுந்ததாக அல்லாஹ் கூறுகிறான். எனவே ஜின்களிடம் உதவி தேடுவது இணைவைப்பாகும்.

மனிதர்களில் உள்ள ஆண்களில் சிலர் ஜின்களில் உள்ள சில ஆண்களைக் கொண்டு பாதுகாப்புத் தேடிக் கொண்டிருந்தனர். எனவே இவர்களுக்கு கர்வத்தை அவர்கள் அதிகமாக்கி விட்டனர் (என்று ஜின்கள் கூறியது)

**அல்குர்ஆன் (72 : 6)**

ஜின்களை அல்லாஹ்வே படைத்திருக்கும் போது அவர்களை அவனுக்கு இணையாக்கி விட்டனர். அறிவில்லாமல் அவனுக்கு ஆண் மக்களையும் பெண் மக்களையும் கற்பனை செய்து விட்டனர். அவனோ தூயவன். அவர்கள் வர்ணிப்பதை விட்டும் அவன் உயர்ந்து விட்டான்.

**அல்குர்ஆன் (6 : 100)**

(அது) அவர்கள் அனைவரையும் அவன் ஒன்று திரட்டும் நாள்! பின்னர் "அவர்கள் உங்களைத் தான் வணங்குவோராக இருந்தார்களா?" என்று வானவர்களிடம் கேட்பான்.

"நீ தூயவன். நீயே எங்கள் பாதுகாவலன். அவர்களுடன் (எங்களுக்கு சம்பந்தம்) இல்லை. மாறாக இவர்கள் ஜின்களையே வணங்கி வந்தனர். இவர்களில் அதிகமானோர் அவர்களையே நம்பினர்" என்று கூறுவார்கள்.

**அல்குர்ஆன் (34 : 40.41)**

ஜின்களைப் பற்றி குர்ஆன் ஹதீஸ் அடிப்படையில் அறிந்துகொள்வதுடன் நாம் நிறுத்திக்கொள்ள வேண்டும். குர்ஆன் ஹதீஸில் சொல்லப்படாத தேவையற்ற விஷயங்களில் ஈடுபட்டால் வழிகேட்டில் விழுந்துவிடுவோம்.

**பலவீனமான செய்தி**

நபி(ஸல்) அவர்கள் கூறியதாக ஒரு செய்தி வந்தால் முதலில் அந்த செய்தி ஆதாரப்பூர்வமானதா? பலவீனமானதா? என்பதை நன்கு ஆய்வு செய்ய வேண்டும். சஹீஹான ஹதீஸிற்குரிய அனைத்து நிபந்தனைகள் இருக்கும் பட்சத்தில் மட்டுமே அது நபி(ஸல்) அவர்களின் கூற்றாக எடுத்துக்கொள்ளப்படும். ஆதாரப்பூர்வமான ஹதீஸிற்குரிய நிபந்தனைகளில் ஒன்று விடுபட்டாலும் அது பலவீனமான செய்தியாகிவிடும். இதன் பின் அதை நபி (ஸல்) அவர்களுடன் தொடர்புபடுத்தி அறிவிக்கக்கூடாது. மேலும் அதனடிப்படையில் மார்க்கத் தீர்ப்பும் தரக்கூடாது .

ஒரு ஹதீஸ் ஆதாரப்பூர்வமானதா? பலவீனமானதா? என்பதை ஆராயும்போது இத்துறையில் பாண்டித்துவம் பெற்ற நமக்கு முன்னால் வாழ்ந்த நல்லறிஞர்கள் என்ன தீர்ப்பு வழங்கினார்கள் என்பதையும் அவசியம் கவனிக்க வேண்டும். ஏனெனில் அவர்களே இவ்விசயத்தில் நம்மை விட நன்கறிந்தவர்கள் .

கப்று வழிபாட்டை கண்டித்து தவ்ஹீத் பேசிய கேரளத்து அறிஞர்களில் சிலர் இந்த ஒழுங்குமுறைகளை கவனிக்கத் தவறிவிட்டனர். தன் கண்ணில்பட்ட செய்திகளை சரியாக ஆராயாமல் மக்களிடம் எடுத்துச் சொன்னதால் இதன் மூலம் கேரளாவில் தவ்ஹீத் சிந்தனை உள்ளவர்களுக்கிடையே தேவையற்ற குழப்பங்களும் பிரிவினைகளும் தோன்றிவிட்டது .

இந்த குழப்பத்திற்கு காரணமாக அமைந்த பலவீனமான ஒரு செய்தியைப் பற்றி அறிந்துகொள்வோம். எந்த மனிதனும் இல்லாத ஒரு இடத்தில் நமக்கு ஆபத்துகள் ஏற்பட்டால் அப்போது நாம் ஜின்களை அழைத்து உதவி தேடலாம். இதற்கு பின்வரும் செய்தி ஆதாரமாக இருப்பதாக சிலர் வாதிடுகிறார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

நீங்கள் ஏதாவது ஒன்றை தவறவிட்டால் அல்லது நீங்கள் மனித இனம் இல்லாத பகுதியில் இருக்கும் போது உதவி தேவைப்பட்டால் அப்போது அல்லாஹ்வின் அடியார்களே.

என்னை காப்பாற்றுங்கள். அல்லாஹ்வின் அடியார்களே என்னை காப்பாற்றுங்கள். என்று கூறட்டும். ஏனென்றால் நம் கண்களுக்குப் புலப்படாத அல்லாஹ்வின் அடியார்கள் இருக்கின்றார்கள். இது அனுபவத்தில் கண்டறியப்பட்டுள்ளது .

தப்ரானீ (14146)

தப்ரானியில் இடம்பெற்றுள்ள இந்த அறிவிப்பில் ஒரு அறிவிப்பாளரின் பெயர் தவறாக மாற்றிக் கூறப்பட்டுள்ளது. இதில் அப்துர் ரஹ்மான் பின் ஷரீக் என்பவர் இடம்பெற்றுள்ளார். இவரை நூலாசிரியர் அப்துர் ரஹ்மான் பின் சஹ்ல் என்று தவறாக கூறியுள்ளார் .

அப்துர் ரஹ்மான் பின் ஷரீக் பலவீனமானவர் ஆவார். இவர் ஹதீஸ் துறையில் பலவீனமானவர் என்று அபூ ஹாதிம் கூறியுள்ளார். இவர் நேர்மையானவர் என்றாலும் தவறிழைப்பவர் என்று இமாம் இப்னு ஹஜர் கூறியுள்ளார் .

அப்துர் ரஹ்மான் இந்த செய்தியை தன்னுடைய தந்தை ஷரீக் பின் அப்தில்லாஹ் வழியாக அறிவிக்கின்றார். ஷரீக் பின் அப்தில்லாஹ்வும் நினைவாற்றல் குறைபாட்டின் காரணமாக பலவீனமானவர் ஆவார்.

இவர் நேர்மையானவர் என்றாலும் மிகவும் மோசமான நினைவாற்றல் உள்ளவர் என யஃகூப் பின் ஷைபா கூறியுள்ளார். ஹதீஸ்களை தவறாக மாற்றி அறிவிப்பவர் என இப்ராஹீம் பின் யஃகூப் கூறியுள்ளார். இவர் அதிகம் தவறிழைப்பவர் என அபூசுர்ஆ கூறியுள்ளார். மற்றும் பலரும் இவரை பலவீனமானவர் என்று கூறியுள்ளனர் .

**(தஹ்தீபுல் கமால்)**

மேலும் இவர் தத்லீஸ் என்ற அறிவிப்பாளரை விட்டு அறிவிக்கும் வேலையை செய்யக்கூடியவர் என்றும் யஹ்யா பின் கத்தான் கூறியுள்ளார். இவர் மேற்கண்ட செய்தியை யாரிடமிருந்து அறிவிக்கின்றாரோ அவரிடமிருந்து நேரடியாக கேட்டதாக சொல்லவில்லை. இதன் காரணத்தாலும் இந்த செய்தி பலவீனமாகின்றது .

இத்துடன் இந்த அறிவிப்பாளர் தொடரில் முறிவும் உள்ளது. இந்த செய்தியை உத்பா பின் கஸ்வான் என்ற நபித்தோழரிடமிருந்து ஸைத் பின் அலீ என்பவர் அறிவிப்பதாக கூறப்பட்டுள்ளது. இவ்விருவருக்கும் இடையில் நீண்ட கால இடைவெளி உள்ளது .

நபித்தோழர் உத்பா பின் கஸ்வான் (ரலி) அவர்கள் ஹிஜ்ரீ 17 வது வருடத்தில் மரணிக்கின்றார். ஆனால் ஸைத் பின் அலீ ஹிஜ்ரீ 80 வது வருடத்தில் தான் பிறக்கின்றார். உத்பா பின் கஸ்வான் (ரலி) அவர்கள் மரணித்து 63 வருடங்களுக்குப் பிறகே ஸைத் பின் அலீ பிறக்கின்றார். எனவே இவ்விருவருக்கும் இடையில் பலர் விடுபட்டுள்ளனர். இது மோசமான அறிவிப்பாளர் தொடர் முறிவாகும். இதன் காரணத்தாலும் இந்த செய்தி பலவீனமாக உள்ளது .

இமாம் இப்னு ஹஜர் அவர்கள் தக்ரீஜுல் அத்கார் என்ற நூலில் இதன் அறிவிப்பாளர் தொடரில் முறிவுள்ளது என்று கூறியுள்ளார். இமாம் ஹைஸமீ அவர்கள் மஜ்மவுஸ் ஸவாயித் என்ற நூலில் ஸைத் பின் அலீ உத்பா பின் கஸ்வான் (ரலி) அவர்களை அடையவில்லை என்றும் இதன் அறிவிப்பாளர்களில் சிலர் பலவீனமானவர்கள் என்றும் கூறியுள்ளார். அல்பானீ அவர்களும் மேற்கண்ட காரணங்களால் இந்த செய்தி பலவீனமானது என்று கூறியுள்ளார் .

இப்படிப்பட்ட மிகவும் பலவீனமான செய்தியைத் தான் ஜின்களிடம் உதவிதேடலாம் என்போர் தங்களின் வழிகெட்ட கொள்கைக்கு ஆதாரமாக காட்டுகின்றனர்.

இச்செய்தியில் ஜின்களைப் பற்றி எந்தப் பேச்சும் இல்லை. கண்களுக்குப் புலப்படாத அடியார்கள் என்பது ஜின்கள் அல்ல. வானவர்கள் என இது தொடர்பாக வரும் வேறு பலவீனமான அறிவிப்புகள் கூறப்பட்டுள்ளது.

மரத்தின் இலைகள் கீழே விழுந்தாலும் அதை பதிவு செய்யும் வானவர்கள் இருக்கின்றனர். **இவர்கள் அல்லாத இன்னும் சில வானவர்களும் அல்லாஹ்விற்காக உள்ளனர்.** எனவே பயனத்தில் உங்களில் ஒருவருக்கு திடுக்கம் ஏற்பட்டால் அல்லாஹ்வின் அடியார்களே உதவி செய்யுங்கள். அல்லாஹ் உங்களுக்கு அருள் புரிவான் என்று அழைக்கட்டும் .

**நூல் : முஸன்னஃப் இப்னு அபீ ஷைபா**

இந்த அறிவிப்பில் உசாமா பின் ஸைத் என்பவர் இடம்பெற்றுள்ளார். இவர் பலவீனமானவர் என்று இமாம் அஹ்மது பின் ஹம்பள் யஹ்யா பின் மயீன் அபூ ஹாதிம்

நஸாயீ இப்னு சஅத் இப்னு ஹிப்பான் அபூ தாவுத் இப்னு ஹஜர் மற்றும் தஹபீ ஆகியோர் கூறியுள்ளனர்.

**(தஹ்தீபுத் தஹ்தீப்)**

யாரும் இல்லாத நேரத்தில் தேவை ஏற்படும் போது வானவர்களை உதவிக்கு அழைக்கலாம் என்ற கருத்தும் தவறானதாகும். ஏனென்றால் இந்தக் கருத்தைக் கூறும் மேற்கண்ட செய்தி பலவீனமாக உள்ளது.

நாம் அல்லாஹ்விடம் மட்டுமே பிரார்த்தனை செய்ய வேண்டும். ஒவ்வொரு தொழுகையிலும் அல்பாத்திஹா அத்தியாயத்தில் உன்னையே வணங்குகிறோம். உன்னிடமே உதவி தேடுகிறோம் என் நாம் கூற வேண்டும். நாம் அல்லாஹ்விடம் மட்டுமே பிரார்த்தனை செய்ய வேண்டும் என்ற பாடத்தை இதன் மூலம் அல்லாஹ் நமக்கு கற்றுத்தருகிறான் .

வானவர்களாக இருந்தாலும் அல்லாஹ்வின் அனுமதியின்றி அவர்களாலும் உதவ முடியாது. எனவே நமக்கு எப்படிப்பட்ட பாதிப்பு எந்த இடத்தில் ஏற்பட்டாலும் சர்வ வல்லமையும் படைத்த வல்ல ரஹ்மானை மட்டுமே அழைக்க வேண்டும்.

**ஜின்கள் உடலில் புகுவார்களா?**

நபி (ஸல்) அவர்கள் உட்பட ஜின் உடலில் புகாத மனிதர் உலகில் ஒருவருமில்லை. விஷயம் இவ்வாறிருக்க குறிப்பிட்ட சிலரிடம் ஜின் இருப்பதாகவும் மற்றவர்களிடம் ஜின் இல்லை என்றும் நம்புவது இஸ்லாத்திற்கு மாற்றமான நம்பிக்கையாகும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “ஜின் இனத்தைச் சேர்ந்த கூட்டாளியொருவன் (ஷைத்தான்) தம்முடன் நியமனம் செய்யப்படாமல் உங்களில் எவரும் இல்லை” என்று கூறினார்கள். அப்போது, “தங்களுடனுமா, அல்லாஹ்வின் தூதரே?” என்று மக்கள் கேட்டனர். அதற்கு அவர்கள், “என்னுடனும்தான். ஆயினும் அல்லாஹ், அவனுக்கெதிராக எனக்கு உதவி செய்துவிட்டான். அவன் (எனக்குப்) பணிந்துவிட்டான். ஆகவே, எனக்கு அவன் நல்லதையே கூறுவான்” என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ பின் மஸ்ஊத் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (5421)**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : “நிச்சயமாக ஷைத்தான் மனிதனின் ரத்த நாளங்களில் ஊடுருவியிருக்கிறான்.

**அறிவிப்பவர் : ஸஃபிய்யா (ரலி)**

**நூல் : புகாரி (2035)**

ஜின்கள் அனைவருடைய உடலிலும் புகுந்துள்ளார்கள். இந்த நம்பிக்கையை சிலர் தவறாக பயன்படுத்திக்கொண்டு நடிப்பு வேலைகளில் ஈடுபடுகின்றனர். ஏதோ ஒரு உள்நோக்கத்திற்காக தங்கள் மீது ஜின் வந்துவிட்டதாக கூறி சுற்றி இருப்பவர்களை பயத்தில் ஆழ்த்துகிறார்கள். இதன் மூலம் தான் நாடியதை அடையளாம் என்பதற்காகவே இந்த பித்தலாட்ட வேளையை அரங்கேற்றுகிறார்கள்.

இதைப் பார்ப்பவர்களும் ஏமாந்து போய் அவர்கள் கூறுவதை உண்மை என்று நம்புகின்றனர். இதன் மூலம் இவர்கள் தங்களுடைய எதிர்பார்ப்புகளை நிறைவேற்றிக்கொள்கிறார்கள். ஜின்களை விரட்டுவதாகக் கூறி சமுதாயத்தில் மக்களை ஏமாற்றிப் பிழைப்பவர்களும் இதன் மூலம் தங்களது ஆதாயத்தை அடைந்து கொள்கின்றனர்.

**தீய எண்ணங்களை ஏற்படுத்துவார்கள்**

கெட்ட ஜின்கள் மனித உள்ளங்களில் தீய எண்ணங்களை ஏற்படுத்துகின்றன. ஜின்களால் வழிகெடுக்கப்பட்டவர்கள் மறுமையில் புலம்புவதை அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறுகிறான்.

அவர்கள் அனைவரையும் அவன் ஒன்று சேருக்கும் நாளில் **“ஜின்களின் கூட்டத்தினரே! அதிகமான மனிதர்களை வழி கெடுத்து விட்டீர்கள்”** (என்று கூறுவான்). அதற்கு மனிதர்களில் உள்ள அவர்களின் நண்பர்கள் “எங்கள் இறைவா! எங்களில் ஒருவர் மற்றவர் மூலம் பயனடைந்தனர். நீ எங்களுக்கு விதித்த கெடுவையும் அடைந்து விட்டோம்” என்று கூறுவார்கள். “நரகமே உங்கள் தங்குமிடம். அதில் நிரந்தரமாக இருப்பீர்கள். அல்லாஹ் நாடுவதைத் தவிர” (என்று கூறுவான்.) உமது இறைவன் ஞானமிக்கவன்; அறிந்தவன்.

**அல்குர்ஆன் (6 : 128)**

எங்கள் இறைவா! **ஜின்களிலும் மனிதர்களிலும் எங்களை வழி கெடுத்தோரை எங்களுக்குக் காட்டு!** அவர்கள் இழிந்தோராகிட அவர்களை எங்களின் பாதங்களின் கீழே ஆக்குகிறோம் என்று (ஏக இறைவனை) மறுத்தோர் கூறுவார்கள். **அல்குர்ஆன் (41 : 29)**

அவன் மனிதர்களின் உள்ளங்களில் தீய எண்ணங்களைப் போடுகிறான். ஜின்களிலும், மனிதர்களிலும் இத்தகையோர் உள்ளனர்.

**அல்குர்ஆன் (114 : 4)**

### ஜின்களால் ஏற்படும் உடல் பாதிப்புகள்

ஜின்கள் மனிதர்களிடம் தீய எண்ணங்களை ஏற்படுத்துகிறார்கள் என்பதில் யாரும் மாற்றுக்கருத்து கொள்வதில்லை. ஜின்களால் மனிதர்களுக்கு இதைத் தாண்டி வேறு உடல் ரீதியான தீங்குகள் ஏற்படுமா? என்பதில் கருத்துவேறுபாடு உள்ளது.

குர்ஆன் வசனங்களுக்கு சுய விளக்கம் தரமாலும் நபிமொழிகளை மறுக்காமலும் ஆய்வுசெய்தால் ஷைத்தான்களால் அதாவது ஜின்களால் மனிதர்களுக்கு உடல்ரீதியான தீங்குகள் ஏற்படலாம் என்பதை தெளிவாக அறிய முடியும்.

சைத்தான் மனிதனிடம் பைத்தியத்தை ஏற்படுத்துவான் என்ற நம்பிக்கை அன்றைய அரபுகளிடம் இருந்து வந்தது. இந்த நம்பிக்கை தவறானது என அல்லாஹ் கூறவில்லை. மாறாக இதை அங்கீகரிக்கும் வகையில் பின்வரும் குர்ஆன் வசனத்தை அருளியுள்ளான்.

வட்டியை உண்போர் (மறுமை நாளில்) **ஷைத்தான் தீண்டியவனைப் போல் பைத்தியமாகவே எழுவார்கள்.** “வியாபாரம் வட்டியைப் போன்றதே” என்று அவர்கள் கூறியதே இதற்குக் காரணம். அல்லாஹ் வியாபாரத்தை அனுமதித்து வட்டியைத் தடை செய்து விட்டான். தமது இறைவனிடமிருந்து அறிவுரை தமக்கு வந்த பின் விலகிக்கொள்பவருக்கு முன் சென்றது உரியது. அவரைப் பற்றிய முடிவு அல்லாஹ்விடம் உள்ளது. மீண்டும் செய்வோர் நரகவாசிகள். அதில் நிரந்தரமாக இருப்பார்கள்.

**அல்குர்ஆன் (2 : 275)**

மனிதர்கள் தேவையற்ற வார்த்தைகளை கூறலாம். ஆனால் அல்லாஹ் எந்த ஒரு வார்த்தையையும் தேவையில்லாமல் கூறமாட்டான். இந்த வசனத்தில் ஷைத்தானால் தீண்டப்பட்டு ஒரு மனிதனுக்கு பைத்தியம் ஏற்படும் என்று அல்லாஹ் தெளிவாகக் கூறுகிறான்.

அய்யூப் (அலை) அவர்களுக்கு ஷைத்தான் மூலம் உடல் நோய் ஏற்பட்டதாக திருக்குர்ஆன் கூறுகிறது.

நமது அடியார் அய்யூபை நினைவூட்டுவீராக! **ஷைத்தான் வேதனையாலும், துன்புறுத்தலாலும் என்னைத் தீண்டி விட்டான்** என்று தமது இறைவனிடம் அவர் பிரார்த்தித்த போது, உமது காலால் மிதிப்பீராக! இதோ குளிர்ந்த குளிக்குமிடம்! பானம்! (எனக் கூறினோம்).

**அல்குர்ஆன் (38 : 41)**

இன்று சிலர் இந்தக் குர்ஆன் வசனங்களுக்கு சுய விளக்கத்தை கொடுத்து ஜின்களால் மனிதனுக்கு இதுபோன்ற தீங்குகளை ஏற்படுத்த முடியாது எனக் கூறுகின்றனர். மார்க்க அறிவும் கொள்கைத் தெளிவும் உள்ளவர்கள் இந்த உளறல்களை பொருட்படுத்தமாட்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மாலை வேளையில் (இரவு தொடங்கும் போது) பாத்திரங்களை மூடி வையுங்கள். தண்ணீர்ப் பைகளை (சுருக்குப் போட்டு) முடிந்து வையுங்கள். கதவுகளைத் தாழிட்டு விடுங்கள். உங்கள் குழந்தைகளை (வெளியே செல்லவிடாமல் அணைத்துப்) பிடித்து வைத்துக் கொள்ளுங்கள். ஏனெனில், (அந்நேரத்தில்) ஜின்கள் பூமியில் பரவி பறித்துச் சென்று விடும்.

**அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள்**

**நூல் : புகாரி (3316)**

அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் மனித **ஜின்களின் கண்ணேறுகளிலிருந்து பாதுகாப்புத் தேடி வந்தார்கள்.** பாதுகாப்புத் தேடுவதற்குரிய இரு அத்தியாயங்கள் (இக்லாஸ் பலக்) இறங்கியவுடன் அவற்றை எடுத்துக்கொண்டார்கள். மற்ற வாசகங்களைக் கூறுவதை விட்டுவிட்டார்கள்.

**அறிவிப்பவர் : அபூசயீத் (ரலி)**

**நூல் : நஸாயீ (5399)**

ஜின்கள் நபி(ஸல்) அவர்களை நோவினை செய்வதற்காக முயற்சித்தன. அல்லாஹ்வின் பாதுகாப்பால் ஜின்கள் தோற்கடிக்கப்பட்டார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு நாள்) தொழும்போது "நான் உன்னிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்" என்றும், "அல்லாஹ்வின் சாபத்தால் உன்னை நான் சபிக்கிறேன்"என்றும் மூன்று முறை கூறியதை நாங்கள் செவியுற்றோம். மேலும், அவர்கள் தமது கரத்தை விரித்து எதையோ பிடிப்பதைப் போன்று சைகை செய்தார்கள். தொழுது முடித்ததும்

நாங்கள் “அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் தொழும்போது ஒன்றைக் கூறினீர்கள். இதற்கு முன் தாங்கள் அவ்வாறு கூறியதை நாங்கள் கேட்டதில்லையே? மேலும், நீங்கள் உங்கள் கரத்தை விரித்ததையும் நாங்கள் கண்டோமே (ஏன்)?” என்று கேட்டோம். அதற்கு அவர்கள் **“அல்லாஹ்வின் எதிரி இப்லீஸ் ஒரு தீப்பந்தத்தை ஏந்திக்கொண்டு அதை என் முகத்தில் வைக்க (என்னிடம்) வந்தான்.** உடனே நான் ‘உன்னிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்’ என்று மூன்று முறையும் ‘அல்லாஹ்வின் முழு சாபத்தால் உன்னை நான் சபிக்கிறேன்’ என மூன்று முறையும் கூறினேன். ஆனால், அவன் பின்வாங்கிச் செல்லவில்லை. பிறகு நான் அவனைப் பிடிக்க விரும்பினேன். அல்லாஹ் வின் மீதாணையாக! எம் சகோதரர் சுலைமான் (அலை) அவர்களின் வேண்டுதல் மட்டும் இல்லையாயின், காலையில் மதீனா நகரச் சிறுவர்கள் அவனுடன் விளையாடும் வகையில் (இந்தப் பள்ளிவாசல்) அவன் கட்டிவைக்கப்பட்டிருப்பான்” என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : அபுத்தர்தா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (942)**

அபுத்தய்யாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் : வயோதிகராக இருந்த அப்துர் ரஹ்மான் பின் கம்பஷ் (ரலி) அவர்களிடம் நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காலத்தை அடைந்தவரா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம் என்று கூறினார்கள். ஷைத்தான்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை (தாக்குவதற்காக) நெருங்கிய போது நபியவர்கள் என்ன செய்தார்கள் என்று நான் கேட்டேன். அதற்கு அவர் அந்த இரவில் ஷைத்தான்கள் ஓடைகளிலிருந்தும் மலைக் கணவாய்களிலிருந்தும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை நோக்கி (தாக்குவதற்காக) விரைந்தன. **அவர்களில் ஒரு ஷைத்தானுடைய கையில் தீப்பந்தம் இருந்தது. அதன் மூலம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முகத்தை கரிப்பதற்கு அந்த ஷைத்தான் நினைத்தது.** அப்போது ஜிப்ரீல் (அலை) அவர்கள் வானிலிருந்து இறங்கி வந்து முஹம்மதே நான் கூறுவதை நீங்களும் கூறிக்கொள்ளுங்கள் என்று கூறினார்கள். அல்லாஹ்வின் முழுமையான (குணமளிக்கும்) சொற்களைக் கொண்டு அவன் படைத்தவற்றின் தீங்கிலிருந்தும் வானிலிருந்து இறங்குபவற்றின் தீங்கிலிருந்தும் வானில் ஏறுபவற்றின் தீங்கிலிருந்தும் இரவு பகலில் ஏற்படும் குழப்பதின் தீங்கிலிருந்தும் நன்மையை விளைவிக்கும் நட்சத்திரத்தைத் தவிர்த்து மற்ற அனைத்து தாரகைகளின் தீங்கிலிருந்தும் அளவற்ற அருளாளனே (உன்னிடம்) பாதுகாப்புத் தேடுகிறேன் என்று ஜிப்ரீல் (அலை) கூறினார்கள். உடனே ஷைத்தான்களின்

நெருப்பு அனைக்கப்பட்டு பாக்கியமும் உயர்வும் மிக்க அல்லாஹ் அவர்களை தோல்வியுறச் செய்தான். **நூல் : அஹ்மத் (14914)**

நபி (ஸல்) அவர்களின் முகத்தை கரிப்பதற்கு ஒரு ஜின் முயற்சித்துள்ளது. அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடிய காரணத்தால் அந்தத் தீங்கு தடுத்து நிறுத்தப்பட்டது என இந்த நபிமொழிகள் கூறுகின்றன.

ஜின்களால் எந்தத் தீங்கையும் மனிதனுக்கு ஏற்படுத்த முடியாது என்றால் ஜின்கள் நபி(ஸல்) அவர்களை துன்புறுத்த ஏன் முயற்சிக்க வேண்டும்? இந்தத் தீங்கை தடுப்பதற்கு நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் ஏன் பாதுகாப்புத் தேட வேண்டும்? ஜிப்ரீல் (அலை) அவர்கள் உடனடியாக ஏன் இறங்கிவர வேண்டும்? இதன்பின் ஷைத்தான்களின் நெருப்பு ஏன் அனைக்கப்பட வேண்டும்? நடக்க சாத்தியமில்லாத ஒரு விசயத்திற்கு அல்லாஹ் இத்தனை ஏற்பாடுகளைச் செய்யமாட்டான்.

ஜின்கள் நம் அறிவுக்குப் புலப்படாத மறைமுகமான படைப்பாகும். எனவே அவர்களால் ஏற்படும் தீங்குகளும் நம் அறிவுக்குப் புலப்படாத மறைமுகமான தீங்குகளாகும். இன்று மனிதர்களுக்கு தீங்குகள் ஏன் ஏற்படுகிறது? எவ்வாறு ஏற்படுகிறது? என்பதை யாரும் முழுமையாக அறியவில்லை. படைத்தவனைத் தவிர இதை முழுமையாக யாராலும் அறிந்துகொள்ள இயலாது. எனவே இவ்விசயத்தில் நாத்திகம் பேசாமல் குர்ஆன் ஹதீஸில் சொல்லப்பட்டதை அப்படியே ஏற்பதுதான் ஈமானுக்கு பாதுகாப்பானது.

**சரியான நம்பிக்கை**

உலகில் நன்மை தீமை அனைத்தும் அல்லாஹ்வின் நாட்டம் இல்லாமல் நடப்பதில்லை. இந்த நம்பிக்கை ஈமானில் மிக முக்கியமானது. ஜின்கள் அல்லாஹ்வை மீறி எந்தத் தீங்கையும் நமக்கு செய்ய முடியாது. அல்லாஹ் நாடினால் மட்டுமே அவர்களால் தீங்கு ஏற்படும்.

“அல்லாஹ் எங்களுக்கு விதித்ததைத் தவிர எங்களுக்கு வேறு எதுவும் ஏற்படாது. அவன் எங்கள் அதிபதி. நம்பிக்கை கொண்டோர் அல்லாஹ்வையே சார்ந்திருக்க வேண்டும்” என்று கூறுவீராக! **அல்குர்ஆன் (9 : 51)**

அல்லாஹ் உமக்கு துன்பத்தை ஏற்படுத்தினால் அவனைத் தவிர அதை நீக்குபவன் யாருமில்லை. அவன் உமக்கு நன்மையை ஏற்படுத்தி விட்டால் அவன் அனைத்துப் பொருட்களின் மீது ஆற்றலுடையவன். **அல்குர்ஆன் (6 : 17)**

“அல்லாஹ் உங்களுக்குத் தீமையை நாடினால் அல்லது நன்மையை நாடினால் அல்லாஹ்விடமிருந்து (தடுக்க) சிறிதளவேனும் சக்தி பெற்றவன் யார்?” என்று கேட்பீராக! அவ்வாறில்லை! நீங்கள் செய்து கொண்டிருப்பதை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கிறான்.

**அல்குர்ஆன் (48 : 11)**

அதன் மூலம் அவர்கள் அல்லாஹ்வின் அனுமதியின்றி எவருக்கும் தீங்கிழைக்க முடியாது.

**அல்குர்ஆன் (2 : 102)**

ஜின்களால் ஏற்படும் தீங்குகளுக்கு அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுவதைத் தவிர வேறு வழியில்லை. அல்லாஹ்வின் வார்த்தைகளான குர்ஆன் வசனங்களை ஓதி ஊதுவதும் நபி(ஸல்) அவர்கள் கற்றுக்கொடுத்த பிரத்யேகமான துஆக்களை கூறுவதின் மூலமும் இதற்கு நிவாரணத்தைப் பெற முடியும்.

எனவே சரியான இறைநம்பிக்கை கொண்டவர்கள் ஜின்களால் பாதிப்பு ஏற்பட்டுவிடுமோ என்று பயந்துகொண்டு இருக்கமாட்டார்கள். அல்லாஹ் நாடினால் மட்டுமே இது ஏற்படும். அவ்வாறு ஏற்பட்டால் அல்லாஹ்விடம் பிரார்த்தித்தால் குணமாகிவிடும் என்று இதை ஒரு சாதாரண விசயமாக எடுத்துக்கொள்ள வேண்டும்.

**எதிர்வாதம்**

ஜின்களால் மனதில் தீய எண்ணங்களை ஏற்படுத்துவதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாது எனக் கூறுபவர்கள் இதற்கு பின்வரும் வசனங்களை ஆதாரமாக கூறுகின்றனர்.

“அல்லாஹ் உங்களுக்கு உண்மையான வாக்குறுதி அளித்தான். நானும் உங்களுக்கு வாக்குறுதி அளித்து உங்களிடம் வாக்கு மீறி விட்டேன். உங்களை அழைத்தேன். **எனது அழைப்பை ஏற்றீர்கள் என்பதைத் தவிர உங்கள் மீது எனக்கு எந்த அதிகாரமும் இல்லை.** எனவே என்னைப் பழிக்காதீர்கள்! உங்களையே பழித்துக் கொள்ளுங்கள்! நான் உங்களைக் காப்பாற்றுபவனும் அல்லன். நீங்கள் என்னைக் காப்பாற்றுவோரும் அல்லர். முன்னர் என்னை (இறைவனுக்கு) இணையாக்கியதை மறுக்கிறேன்” என்று தீர்ப்புக் கூறப்பட்டவுடன் ஷைத்தான் கூறுவான். அநீதி இழைத்தோருக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு

**அல்குர்ஆன் (14 : 22)**

**<u>“எனது அடியார்கள் மீது உனக்கு எந்த அதிகாரமும் இல்லை”</u>** (என்றும் இறைவன் ஷைத்தானிடம் கூறினான்.) உமது இறைவன் பொறுப்பேற்கப் போதுமானவன்.

**அல்குர்ஆன் (17 : 65)**

அவனுக்கு அவர்கள் மீது எந்த அதிகாரமும் இல்லை.

**அல்குர்ஆன் (34 : 21)**

இந்த வசனங்களில் அடியார்கள் மீது ஷைத்தானுக்கு எந்த அதிகாரமும் இல்லை எனக் கூறப்பட்டுள்ளது. இதை வைத்துக்கொண்டு ஷைத்தானால் மனிதனுக்கு உடல் ரீதியான எந்த தீங்கையும் ஏற்படுத்த முடியாது என வாதிடுகின்றனர்.

இது தவறான விளக்கமாகும். மேற்கண்ட வசனங்கள் ஷைத்தான் ஏற்படுத்தும் உடல் ரீதியான தீங்குகள் குறித்துப் பேசவில்லை. மாறாக ஷைத்தான் தீய எண்ணங்களை ஏற்படுத்தி வழிகெடுப்பதைப் பற்றி பேசுகின்றன.

மறுமையில் நரகவாசிகளைப் பார்த்து உங்களை தீய காரியங்களுக்கு அழைத்ததைத் தவிர வேறு எந்த அதிகாரமும் எனக்கில்லை என ஷைத்தான் கூறுவான். நான் தீமைகளை நோக்கி உங்களை அழைத்தேன். அதற்குக் கட்டுப்பட்டு நீங்களாக முன்வந்தீர்கள். உங்களை நான் வலுக்கட்டாயமாக வழிகேட்டிற்கு இழுத்துவரவில்லை எனக் கூறுவான்.

ஷைத்தானுக்கு எந்த அதிகாரமும் இல்லை என்றால் நம்மை வலுக்கட்டாயமாக வழிகெடுக்கும் எந்த அதிகாரம் அவனுக்கு இல்லை என்று இவ்வசனத்தை பார்க்கும் போது அறிய முடிகிறது.

எனது அடியார்களில் உன்னைப் பின்பற்றிய வழிகேடர்களைத் தவிர மற்றவர்கள் மீது உனக்கு எந்த அதிகாரமும் இல்லை.

**அல்குர்ஆன் (15 : 42)**

இந்த வசனத்தில் ஷைத்தானைப் பின்பற்றிச் செல்பவர்களைத் தவிர மற்றவர்கள் மீது அவனுக்கு எந்த அதிகாரமும் இல்லை எனக் கூறப்பட்டுள்ளது. உடலில் தீங்கு ஏற்படுத்துவதைப் பற்றி இவ்வசனம் பேசுகிறது என்றால் ஷைத்தானைப் பின்பற்றிச் செல்பவர்களுக்கு ஷைத்தானால் உடல் தீங்கை ஏற்படுத்த முடியும். நல்லவர்களுக்கு அவனால் ஒன்றும் செய்ய

முடியாது என்ற பொருள் வருகிறது. எனவே இவர்களின் சுய விளக்கத்தை ஏற்றாலும் ஷைத்தானால் தீயவர்களுக்கு உடல் பாதிப்பை ஏற்படுத்த முடியும் என்பதுதான் தெளிவாகிறது.

இவ்வசனம் ஷைத்தானின் வழிகெடுக்கும் அதிகாரத்தைப் பற்றி பேசுகின்றது. ஷைத்தானைப் பின்பற்றிச் செல்பவர்களையே ஷைத்தானால் வழிகெடுக்க முடியும். மற்றவர்களை அவனால் வழிகெடுக்க முடியாது என்பதே இதன் பொருள். இதை வைத்துக்கொண்டு ஷைத்தானால் உடல் தீங்குகளை ஏற்படுத்த முடியாது என வாதிடுவது மடமையாகும்.

இத்துடன் குர்ஆனிலும் ஹதீஸ்களிலும் மனிதனுக்கு ஷைத்தானால் உடல்ரீதியான தீங்குகள் ஏற்படும் என தெளிவாகக் கூறப்பட்டுள்ளது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

## ஷைத்தானைப் பற்றிய விளக்கங்கள்

### ஜின் இனத்தைச் சார்ந்தவன்

ஷைத்தான் ஜின் இனத்தைச் சார்ந்தவனாவான் என்று குர்ஆன் கூறுகிறது.

“ஆதமுக்குப் பணியுங்கள்!” என்று வானவர்களுக்கு நாம் கூறிய போது இப்லீஸைத் தவிர அனைவரும் பணிந்தனர். அவன் ஜின் இனத்தைச் சேர்ந்தவனாக இருந்தான்.

**அல்குர்ஆன் (18 : 50)**

### ஷைத்தானின் உருவ அமைப்பு

நரகத்தில் ஸக்கூம் என்ற ஒரு கொடிய மரம் உள்ளது. இதனுடைய கொடூரமான வடிவத்தைப் பற்றி அல்லாஹ் விவரிக்கும் போது அது ஷைத்தான்களின் தலைகளைப் போன்று இருக்கும் என்று உவமை காட்டுகிறான். இதிலிருந்து ஷைத்தான்களின் வடிவம் அருவருக்கத்தக்க வகையில் கொடூரமாக இருக்கும் என்பதை அறிந்துகொள்ளலாம்.

இது சிறந்த தங்குமிடமா? அல்லது ஸக்கூம் மரமா? அதை அநீதி இழைத்தோருக்குச் சோதனையாக நாம் ஆக்கினோம். அது நரகத்தின் அடித்தளத்திலிருந்து வெளிப்படும் மரம். அதனுடைய பாளை ஷைத்தான்களின் தலைகளைப் போன்றது.

**அல்குர்ஆன் (37 : 62.63.64.65)**

ஷைத்தானிற்கு கொம்புகள் இருப்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள். இதை பின்வரும் ஹதீஸ்களில் அறியலாம்.

“இறைவா! எங்கள் ஷாம் நாட்டில் எங்களுக்கு சுபிட்சத்தை வழங்குவாயாக! இறைவா! எங்கள் யமன் நாட்டில் எங்களுக்கு சுபிட்சத்தை வழங்குவாயாக!” என்று நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள். மக்கள் (சிலர்), “எங்கள் நஜ்து (இராக்) நாட்டிலும் (சுபிட்சம் ஏற்படப் பிரார்த்தியுங்களேன்!)” என்று (மூன்று முறை) கேட்க, நபி (ஸல்) அவர்கள், அங்குதான் நிலநடுக்கங்களும் குழப்பங்களும் தோன்றும்; அங்குதான் ஷைத்தானின் கொம்பு உதயமாகும்” என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**

**நூல் : புகாரி (1037)**

நபி (ஸல்) அவர்கள் தொடர்ந்து கூறினார்கள் : மேலும், சூரியன் உதிக்கின்ற நேரத்திலும் அது மறைகின்ற நேரத்திலும் தொழாதீர்கள். ஏனெனில் அது, ஷைத்தானின் இரு கொம்புகளுக்கிடையே உதிக்கின்றது.

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**

**நூல் : புகாரி (3273)**

## ஷைத்தான் நெருப்பால் படைக்கப்பட்டவன்

ஷைத்தான் நெருப்பால் படைக்கப்பட்டவன்.

“நான் உனக்குக் கட்டளையிட்ட போது பணிவதை விட்டும் உன்னைத் தடுத்தது எது?” என்று (இறைவன்) கேட்டான். “நான் அவரை விடச் சிறந்தவன். என்னை நீ நெருப்பால் படைத்தாய்! அவரைக் களிமண்ணால் படைத்தாய்!” என்று கூறினான்.

**அல்குர்ஆன் (7 : 12)**

“நான் அவரை விடச் சிறந்தவன். என்னை நெருப்பால் நீ படைத்தாய். அவரைக் களிமண்ணால் படைத்தாய்” என்று அவன் கூறினான்.

**அல்குர்ஆன் (38 : 76)**

**ஷைத்தானின் உணவு**

உணவு உண்பதற்கு முன்னால் பிஸ்மில்லாஹ் என்று கூற வேண்டும். இறைவனுடைய பெயரை கூறாமல் உணவு உட்கொண்டால் அந்த உணவு ஷைத்தானிற்கு செல்வதாக நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். பிஸ்மில்லாஹ் கூறப்படாமல் உண்ப்படுகின்ற உணவு தான் ஷைத்தானின் உணவாகும்.

ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது : நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் (சேர்ந்து) உணவு உண்பதற்கு அமர்ந்தால், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முதலில் கை வைப்பதற்கு முன் எங்கள் கைகளை (உணவில்) நாங்கள் வைக்கமாட்டோம். ஒரு முறை நாங்கள் உணவு உண்பதற்கு அவர்களுடன் அமர்ந்தோம். அப்போது ஒரு சிறுமி, (யாராலோ) தள்ளிவிடப்பட்டவளைப் போன்று (விரைந்து) வந்து, (பிஸ்மில்லாஹ் சொல்லாமல்) உணவில் கை வைக்கப்போனாள்.

உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவளது கையைப் பிடித்துக்கொண்டார்கள். பிறகு ஒரு கிராமவாசி, (யாராலோ) தள்ளி விடப்பட்டவரைப் போன்று (விரைந்து வந்து பிஸ்மில்லாஹ் சொல்லாமல் உணவில் கை வைக்க) வந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரது கையையும் பிடித்துக் கொண்டார்கள்.

அப்போது, “அல்லாஹ்வின் பெயர் சொல்லப்படாத உணவில் ஷைத்தான் பங்கேற்கிறான். அவன் இச்சிறுமியுடன் வந்து, அவள் மூலமே இந்த உணவில் பங்கேற்கப் பார்த்தான். ஆகவே, அவளது கையை நான் பிடித்து (அதைத் தடுத்து)விட்டேன். பிறகு இந்தக் கிராமவாசியுடன் வந்து அவர் மூலம் இந்த உணவில் பங்கேற்கப் பார்த்தான். ஆகவே, இவரது கையைப் பிடித்து (அதைத் தடுத்து)விட்டேன். என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! ஷைத்தானின் கை அச்சிறுமியின் கையுடன் எனது கைக்குள் சிக்கிக்கொண்டது” என்று கூறினார்கள்.

**நூல் : முஸ்லிம் (4105)**

பிஸ்மில்லாஹ் என்று கூறி உணவு உண்ணும் போது ஷைத்தானால் அந்த உணவை உண்ண முடியாது. அந்த உணவின் பலன் முழுமையாக பிஸ்மில்லாஹ் கூறி உண்டவருக்கே செல்கிறது. எனவே பிஸ்மில்லாஹ் என்று கூறி உண்ணுவதன் மூலம் நம்முடன் ஷைத்தானை உண்ணவிடாமல் தடுக்கலாம்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒருவர் தமது இல்லத்திற்குள் நுழையும் போதும் உணவு உண்ணும்போதும் அல்லாஹ்வை நினைவுகூர்ந்தால், ஷைத்தான் (தன் கூட்டத்தாரிடம்), "இன்றைய இரவில் உங்களுக்கு (இங்கே) தங்குமிடமும் இல்லை; உண்ண உணவுமில்லை" என்று கூறுகிறான். ஒருவர் இல்லத்திற்குள் நுழையும் போது அல்லாஹ்வை நினைவுகூராவிட்டால் ஷைத்தான் (தன் கூட்டத்தாரிடம்), "இன்றைய இரவில் உங்களுக்குத் தங்குமிடம் கிடைத்துவிட்டது" என்று சொல்கிறான்.

அவர் உணவு உண்ணும்போது அல்லாஹ்வின் பெயர்கூறாவிட்டால் ஷைத்தான் "இன்றைய இரவில் நீங்கள் தங்கும் இடத்தையும் உணவையும் அடைந்துகொண்டீர்கள்" என்று சொல்கிறான்.

**அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (4106)**

**ஷைத்தான் அருந்தும் பானம்**

உண்ணுவதற்கு அனுமதிக்கப்பட்ட பொருளாக இருந்தாலும் இஸ்லாம் கற்றுத்தந்தவாறு உண்ண வேண்டும். இஸ்லாமிய முறைக்கு மாற்றமாக உட்கொண்டாலோ பருகினாலோ அந்த உணவும் பானமும் ஷைத்தானிற்கு செல்கிறது. இதை பின்வரும் ஹதீஸ்கள் தெளிவுபடுத்துகிறது.

நின்று பருகக்கூடிய ஒரு மனிதரை நபி (ஸல்) அவர்கள் பார்த்த போது வாந்தி எடு என்று (பருகியவரைப் பார்த்துக்) கூறினார்கள். அவர் ஏன் என்று வினவினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் நீயும் பூனையும் ஒன்றாக சேர்ந்து பருகுவதை விரும்புவீரா என்று கேட்டார்கள். அவர் விரும்ப மாட்டேன் என்று கூறினார். (நீ நின்று குடித்த போது) பூனையை விட மோசமான ஷைத்தான் உன்னுடன் சோந்து பருகினான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : அஹ்மத் (7662)**

**ஷைத்தானின் இருப்பிடம்**

ஷைத்தான்கள் அசுத்தமான இடங்களில் வசிக்கின்றன. கழிப்பறைகள் ஷைத்தான்கள் வருகின்ற இடமாக இருப்பதால் அங்கு செல்லும் போது ஷைத்தானிடமிருந்து பாதுகாவல் தேடுமாறு நபி (ஸல்) அவர்கள் நமக்கு கற்றுத்தந்துள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்குள் நுழைய முற்படும்போது, "இறைவா! (அருவருக்கத் தக்க செயல்கள், இழிவான எண்ணங்கள் ஆகியற்றைத் தூண்டும்) ஆண் பெண் ஷைத்தானி(ன் தீங்கி)ருந்து உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன்" என்று கூறுவார்கள்.

**அறிவிப்பவர் : அனஸ் (ரலி)**

**நூல் : புகாரி (142)**

இந்த கழிப்பிடங்கள் (ஷைத்தான்கள்) வருகைதரும் இடமாக உள்ளது. ஆகவே உங்களில் ஒருவர் கழிப்பிடத்திற்குள் நுழைய முற்படும்போது, "இறைவா! (அருவருக்கத் தக்க செயல்கள், இழிவான எண்ணங்கள் ஆகியற்றைத் தூண்டும்) ஆண் பெண் ஷைத்தானி(ன் தீங்கிலி)ருந்து உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன்" என்று கூறிக்கொள்ளட்டும்.

**அறிவிப்பவர் : ஸைது பின் அர்கம் (ரலி) நூல் : இப்னு மாஜா (292)**

இறைவனை ஞாபகப்படுத்தும் நற்காரியங்கள் எதுவும் வீடுகளில் செய்யப்படாமல் இருந்தால் அந்த வீடு ஷைத்தான்கள் வசிப்பதற்கு ஏற்ற இடமாக ஆகிவிடுகிறது.

குர்ஆன் ஓதுவது தொழுவது திக்ர் செய்வது போன்ற இறைவனை ஞாபகப்படுத்தும் காரியங்கள் வீடுகளில் அரங்கேறினால் ஷைத்தானும் அவனது கூட்டத்தாரும் அந்த வீட்டில் வசிக்க இயலாமல் அதை விட்டும் வெளியேறிவிடுகிறார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒருவர் தமது இல்லத்திற்குள் நுழையும் போதும் உணவு உண்ணும்போதும் அல்லாஹ்வை நினைவுகூர்ந்தால், ஷைத்தான் (தன் கூட்டத்தாரிடம்), "இன்றைய இரவில் உங்களுக்கு (இங்கே) தங்குமிடமும் இல்லை; உண்ண உணவுமில்லை" என்று கூறுகிறான். ஒருவர் இல்லத்திற்குள் நுழையும் போது அல்லாஹ்வை நினைவுகூராவிட்டால் ஷைத்தான் (தன் கூட்டத்தாரிடம்), "இன்றைய இரவில் உங்களுக்குத் தங்குமிடம் கிடைத்துவிட்டது" என்று சொல்கிறான்.

அவர் உணவு உண்ணும்போது அல்லாஹ்வின் பெயர்கூறாவிட்டால் ஷைத்தான் "இன்றைய இரவில் நீங்கள் தங்கும் இடத்தையும் உணவையும் அடைந்துகொண்டீர்கள்" என்று சொல்கிறான்.

**அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (4106)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : உங்கள் இல்லங்களை (தொழுகை, ஓதல் நடைபெறாத) சவக் குழிகளாக ஆக்கிவிடாதீர்கள். ‘அல்பகரா’ எனும் (இரண்டாவது) அத்தியாயம் ஓதப்படும் இல்லத்திலிருந்து ஷைத்தான் வெருண்டோடிவிடுகிறான்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (1430)**

**இறைக் கட்டளையை மறுத்தான்**

நல்லவனாக இருந்த ஷைத்தான் இறைவனுக்கு மாறுசெய்த ஒரே காரணத்திற்காக கெட்டவனாக மாறினான். இறைவன் ஒரு கட்டளையிட்டுவிட்டால் எந்த விருப்பு வெறுப்பின்றி கட்டுப்பட்டால் தான் முஸ்லிமாக இருக்க முடியும். வெற்றி பெற முடியும்.

இறைவன் ஷைத்தானிடம் ஆதம் (அலை) அவர்களுக்கு பணியுமாறு கூறும் போது இறைக்கட்டளைக்கு கட்டுப்படாமல் இறைவனை எதிர்த்துப் பேசினான். இறைமறுப்பாளனாக ஆனான்.

“சேற்றிலிருந்த கருப்புக் களிமண்ணால் வடிவமைக்கப்பட்டு நான் மனிதனைப் படைக்கவுள்ளேன்” என்று வானவர்களுக்கு உமது இறைவன் கூறியதை நினைவூட்டுவீராக! “அவரை நான் சீர்படுத்தி எனது உயிரை அவருக்குள் நான் ஊதும் போது, அவருக்குப் பணிந்து விழுங்கள்!” (என்று கூறினான்)

இப்லீஸைத் தவிர வானவர்கள் அனைவரும் ஒட்டு மொத்தமாகப் பணிந்தனர். அவன் பணிந்தவனாக இருக்க மறுத்து விட்டான். “இப்லீஸே! பணிந்தோருடன் நீ சேராமல் இருப்பது ஏன்?” என்று (இறைவன்) கேட்டான்.

“சேற்றிலிருந்த கருப்புக் களிமண்ணால் வடிவமைக்கப்பட்டு நீ படைத்த மனிதனுக்கு நான் பணிபவனாக இல்லை” என்று அவன் கூறினான்.

**அல்குர்ஆன் (15 : 28)**

**பெருமையின் காரணத்தால் வழிகெட்டான்**

அல்லாஹ் அல்லவா நமக்கு உத்தரவு இடுகிறான் என்று ஷைத்தான் கவனிக்காமல் ஆதம் உயர்ந்தவரா? நான் உயர்ந்தவனா? என்று யோசிக்க முற்பட்டான். அவனிடம் ஏற்பட்ட இந்த

ஆணவம் தான் அவனை வழிகெடுத்தது. படைத்த இறைவனிடத்திலேயே திமிரிப் பேசத் தூண்டியது.

"ஆதமுக்குப் பணியுங்கள்!" என்று நாம் வானவர்களுக்குக் கூறிய போது இப்லீஸைத் தவிர அனைவரும் பணிந்தனர். அவனோ மறுத்துப் பெருமையடித்தான். (நம்மை) மறுப்பவனாக ஆகி விட்டான்.

**அல்குர்ஆன் (2 : 34)**

"ஆதமுக்குப் பணியுங்கள்!" என்று வானவர்களுக்கு நாம் கூறிய போது இப்லீஸைத் தவிர அனைவரும் பணிந்தனர். "களிமண்ணால் நீ படைத்தவருக்குப் பணிவேனா?" என்று அவன் கேட்டான்.

**அல்குர்ஆன் (17 : 61)**

"எனது இரு கைகளால் நான் படைத்ததற்கு நீ பணிவதை விட்டும் எது உன்னைத் தடுத்தது? அகந்தை கொண்டு விட்டாயா? அல்லது உயர்ந்தவனாக ஆகி விட்டாயா?" என்று (இறைவன்) கேட்டான்.

"நான் அவரை விடச் சிறந்தவன். என்னை நெருப்பால் நீ படைத்தாய். அவரைக் களிமண்ணால் படைத்தாய்" என்று அவன் கூறினான்.

**அல்குர்ஆன் (38 : 75)**

**வானவர்களின் கூட்டத்திலிருந்து வெளியேற்றப்பட்டான்**

ஷைத்தான் இறைக்கட்டளையை மீறுவதற்கு முன்பு வரை வானவர்களின் கூட்டத்தில் ஒருவனாகவே இருந்தான். இவைனுக்கு கட்டுப்பட மறுத்த உடன் வானவர்களின் சபையிலிருந்து வெளியேற்றப்பட்டான்.

"இங்கிருந்து நீ இறங்கி விடு! இங்கே நீ பெருமையடிப்பது தகாது. எனவே வெளியேறு! நீ சிறுமையடைந்தவனாவாய்" என்று (இறைவன்) கூறினான்.

**அல்குர்ஆன் (7 : 13)**

இங்கிருந்து நீ வெளியேறு! நீ விரட்டப்பட்டவன். தீர்ப்பு நாள் வரை உன் மீது சாபம் உள்ளது (என்று இறைவன் கூறினான்) **அல்குர்ஆன் (15 : 34)**

“இங்கிருந்து வெளியேறு! நீ விரட்டப்பட்டவன். தீர்ப்பு நாள் வரை உன் மீது எனது சாபம் உள்ளது” என்று (இறைவன்) கூறினான்.

**அல்குர்ஆன் (38 : 77)**

## அவகாசம் அளிக்கப்பட்டான்

தன்னை அழித்துவிடக்கூடாது. தனக்கு நீண்ட ஆயுளை அளிக்க வேண்டும் என்று ஷைத்தான் இறைவனிடம் கோரினான். ஷைத்தானுடைய இந்த கோரிக்கையை இறைவனும் ஏற்றுக்கொண்டு அவகாசம் அளித்தான்.

நீண்ட ஆயுள் ஷைத்தானிற்கு வழங்கப்பட்டாலும் உலகம் அழிக்கப்படும் போது ஷைத்தானும் அழிக்கப்படுவான். நிச்சயமாக அவனும் ஒரு நேரத்தில் மரணத்தை தழுவுவான்.

“அவர்கள் உயிர்ப்பிக்கப்படும் நாள் வரை எனக்கு அவகாசம் அளிப்பாயாக!” என்று அவன் கேட்டான். “நீ அவகாசம் அளிக்கப்பட்டவனாவாய்” என்று (இறைவன்) கூறினான்.

**அல்குர்ஆன் (7 : 14)**

“இறைவா! அவர்கள் உயிர்ப்பிக்கப்படும் நாள் வரை எனக்கு அவகாசம் தருவாயாக!” என்று அவன் கேட்டான். “குறிப்பிட்ட நேரம் வரும் நாள் வரை நீ அவகாசம் அளிக்கப்பட்டவன்” என்று (இறைவன்) கூறினான்.

**அல்குர்ஆன் (15 : 36)**

“என் இறைவா! அவர்கள் உயிர்ப்பிக் கப்படும் நாள் வரை எனக்கு அவகாசம் அளிப்பாயாக!” என்று அவன் கேட்டான். “அறியப்பட்ட நேரத்தை உள்ளடக்கிய நாள் வரை நீ அவகாசம் கொடுக்கப்பட்டவன்” என்று இறைவன் கூறினான்.

**அல்குர்ஆன் (38 : 79)**

## ஷைத்தானின் சபதம்

ஆணவத்தால் வழிகெட்ட ஷைத்தான் ஆதமுடைய மக்கள் அனைவரையும் வழிகெடுப்பேன் என்று அல்லாஹ்விடம் சபதம் எடுத்தான். கடும் முயற்சி செய்து மக்கள் அனைவரையும் நரகத்தில் தள்ளுவது தான் ஷைத்தானுடைய முழு நோக்கமாகும். மக்களை வழிகெடுப்பதற்காகத் தான் அவன் இறைவனிடம் அவகாசம் கேட்டான்.

அல்லாஹ் அவனை (ஷைத்தானை) சபித்து விட்டான். “உன் அடியார்களில் குறிப்பிட்ட தொகையினரை வென்றெடுப்பேன்” என்று அவன் (இறைவனிடம்) கூறினான்.

“அவர்களை வழி கெடுப்பேன்; அவர்களுக்குத் தவறான) ஆசை வார்த்தை கூறுவேன்; அவர்களுக்குக் கட்டளையிடுவேன்; அவர்கள் கால்நடைகளின் காதுகளை அறுப்பார்கள். (மீண்டும்) அவர்களுக்குக் கட்டளையிடுவேன்; அல்லாஹ் வடிவமைத்ததை அவர்கள் மாற்றுவார்கள்” (எனவும் கூறினான்). அல்லாஹ்வையன்றி ஷைத்தானைப் பொறுப்பாளனாக்கிக் கொள்பவன் வெளிப்படையான நஷ்டத்தை அடைந்து விட்டான். **அல்குர்ஆன் (4 : 118.119)**

“நீ என்னை வழி கெடுத்ததால் அவர்களுக்காக உனது நேரான பாதையில் அமர்ந்து கொள்வேன்” என்று கூறினான். “பின்னர் அவர்களின் முன்னும், பின்னும், வலமும், இடமும் அவர்களிடம் வருவேன். அவர்களில் அதிகமானோரை நன்றி செலுத்துவோராக நீ காண மாட்டாய்” (என்றும் கூறினான்).

**அல்குர்ஆன் (7 : 16.17)**

“என் இறைவா! என்னை நீ வழி கெடுத்ததால் பூமியில் (தீமைகளை) அழகாக்கிக் காட்டுவேன். அவர்களில் உன்னால் தேர்ந்தெடுக்கப்பட்ட உனது அடியார்களைத் தவிர (மற்றவர்கள்) அனைவரையும் வழி கெடுப்பேன்” என்று கூறினான்.

“இதோ என்னிடம் நேரான வழி உள்ளது” என்று (இறைவன்) கூறினான். எனது அடியார்களில் உன்னைப் பின்பற்றிய வழிகேடர்களைத் தவிர மற்றவர்கள் மீது உனக்கு எந்த அதிகாரமும் இல்லை.

**அல்குர்ஆன் (15 : 40)**

“என்னை விட நீ சிறப்பித்த இவரைப் பற்றிக் கூறுவாயாக! கியாமத் நாள் வரை எனக்கு நீ அவகாசம் அளித்தால் சிலரைத் தவிர இவரது சந்ததிகளை வேரறுப்பேன்” எனவும் கூறினான்.

**அல்குர்ஆன் (17 : 62)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : (எனது இறைவா) உனது கண்ணியத்தின் மீதும் மகத்துவத்தின் மீதும் சத்தியமாக ஆதமுடைய மக்கள் உயிருடன் இருக்கும் காலமெல்லாம் அவர்களை நான் வழிகெடுத்துக்கொண்டே இருப்பேன் என்று இப்லீஸ் இறைவனிடம் கூறினான். அதற்கு இறைவன் எனது கண்ணியத்தின் மீதும் மகத்துவத்தின் மீதும்

சத்தியமாக அவர்கள் என்னிடம் பாவமன்னிப்புத் தேடும் காலமெல்லாம் அவர்களை நான் மன்னித்துக்கொண்டே இருப்பேன் என்று கூறினான்.

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : அஹ்மத் (10814)**

ஷைத்தான் எப்படியெல்லாம் மனிதனை வழிகெடுப்பான் என்பதை நபி (ஸல்) அவர்கள் பின் வரும் ஹதீஸில் விளக்கியுள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஆதமுடைய மகனை வழிகெடுப்பதற்காக ஷைத்தான் (நல்) வழிகளில் அமர்ந்துகொள்கிறான். அவனை வழிகெடுப்பதற்காக இஸ்லாம் என்ற (நல்) வழியில் அமர்ந்துகொண்டு உனது மார்க்கத்தையும் உனது தந்தையின் மார்க்கத்தையும் உனது பாட்டனாரின் மார்க்கத்தையும் விட்டுவிட்டு நீ இஸ்லாத்தை ஏற்கப்போகிறாயா? என்று கூறுவான். ஆதமுடைய மகன் ஷைத்தானிற்கு மாறுசெய்து இஸ்லாத்தை ஏற்றுவிட்டால் அவனை வழிகெடுப்பதற்காக ஹிஜ்ரத் (இறைவனுக்காக நாடுதுறத்தல்) என்ற (நல்) வழியில் அமர்ந்துகொண்டு உனது பூமியையும் உனது வானத்தையும் விட்டுவிட்டு நீ ஹிஜ்ரத் செய்யப்போகிறாயா? ஹிஜ்ரத் செய்தவர் கட்டிப்போடப்பட்ட குதிரையைப் போன்றவர் ஆவார் என்று கூறுவான். ஷைத்தானிற்கு மாறுசெய்து ஹிஜ்ரத் செய்துவிட்டால் ஆதமுடைய மகனை வழிகெடுப்பதற்காக அறப்போர் என்ற (நல்) வழியில் ஷைத்தான் அமர்ந்துகொண்டு அறப்போரில் உயிரையும் பொருளையும் அற்பணிக்க வேண்டும். நீ போரிட்டு கொல்லப்பட்டுவிட்டால் (உன்) மனைவியை மற்றவர் மணமுடித்துக்கொள்வார். உனது செல்வம் பங்கிடப்பட்டு மற்றவரால் எடுத்துக்கொள்ளப்படும் என்று கூறுவான். (உறுதியுள்ள மனிதன்) இவனுக்கு மாறு செய்து அறப்போரில் கலந்துகொள்வான். இந்த நல்ல காரியங்களை செய்தவராக யார் மரணிக்கிறாரோ அவரை சொர்க்கத்தில் நுழையச் செய்வது அல்லாஹ்வின் மீது கடமையாகிவிடுகிறது.

**அறிவிப்பவர் : சப்ரா பின் அபீ ஃபாகிஹ் (ரலி)**

**நூல் : அஹ்மத் (15392)**

### முதன் முதலில் ஷைத்தான் வலையில் விழுந்தவர்கள்

ஷைத்தானுடைய சதியில் முதன் முதலில் ஆதம் (அலை) அவர்களும் ஹவ்வா (அலை) அவர்களும் விழுந்தார்கள். சொர்க்கத்தில் இன்பத்தை அனுபவித்துக்கொண்டிருந்த இவ்விருவருக்கும் பொய்யான தகவலை ஷைத்தான் தந்தான்.

அதை நம்பி அவ்விருவரும் இறைவனுடைய கட்டளையை மீறினார்கள். இதனால் இறைவன் அவ்விருவரையும் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றிவிட்டான்.

ஆதமே! இவன் உமக்கும், உமது மனைவிக்கும் எதிரியாவான். அவன் உங்களை சொர்க்கத்திலிருந்து வெளியேற்றி விட வேண்டாம். அப்போது நீர் துர்பாக்கியசாலியாவீர்!

இங்கே உமக்குப் பசிக்காது! நிர்வாணமாக மாட்டீர்! இங்கே உமக்குத் தாகமும் ஏற்படாது. உம்மீது வெயிலும் படாது! (என்று கூறினோம்).

அவரிடம் ஷைத்தான் தீய எண்ணத்தை ஏற்படுத்தினான். ஆதமே! நிலையான (வாழ்வளிக்கும்) மரத்தைப் பற்றியும், அழிவில்லா ஆட்சியைப் பற்றியும் நான் உமக்கு அறிவிக்கட்டுமா? (என்றான்.)

அவ்விருவரும் அதிலிருந்து சாப்பிட்டனர். அவ்விருவருக்கும் தங்களது வெட்கத்தலங்கள் வெளிப்பட்டன. அவ்விருவரும் சொர்க்கத்தின் இலையால் தங்களை மறைத்துக் கொள்ள முற்பட்டனர். ஆதம் தமது இறைவனுக்கு மாறு செய்தார். எனவே அவர் வழி தவறினார்.

**அல்குர்ஆன் (20 : 117)**

### மனிதர்களின் விரோதி

மனிதர்களை வெற்றியடைய விடாமல் நரகத்திற்கு அழைப்பது ஷைத்தானுடைய குறிக்கோள் என்பதால் அல்லாஹ் திருக்குர்ஆனில் பல இடங்களில் ஷைத்தானைப் பற்றி நமக்கு எச்சரிக்கை செய்கிறான். அவன் மனிதர்களுக்கு பகிரங்கமான விரோதி என்றும் குறிப்பிடுகிறான்.

ஷைத்தான் உங்களுக்கு எதிரியாவான். அவனை எதிரியாகவே ஆக்கிக் கொள்ளுங்கள்! நரகவாசிகளாக ஆவதற்காகவே அவன் தனது கூட்டத்தாரை அழைக்கிறான்.

**அல்குர்ஆன் (35 : 6)**

மனிதர்களே! பூமியில் உள்ளவற்றில் அனுமதிக்கப்பட்ட தூய்மையானதை உண்ணுங்கள்! ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள்! அவன் உங்களுக்குப் பகிரங்க எதிரி.

**அல்குர்ஆன் (2 : 168)**

ஷைத்தான் மனிதனுக்குப் பகிரங்க எதிரியாவான்.

**அல்குர்ஆன் (12 : 5)**

ஷைத்தான் மனிதனுக்குத் துரோகம் செய்பவனாகவே இருக்கிறான்.

**அல்குர்ஆன் (25 : 29)**

ஆதமுடைய மக்களே! உங்கள் பெற்றோர் இருவரையும் ஷைத்தான் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றியது போல் உங்களையும் அவன் குழப்பிவிட வேண்டாம். அவர்களின் வெட்கத்தலங்களை அவர்களுக்குக் காட்ட ஆடைகளை அவர்களை விட்டும் அவன் கழற்றினான். நீங்கள் அவர்களைக் காணாத வகையில் அவனும், அவனது கூட்டத்தாரும் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். நம்பிக்கை கொள்ளாதோருக்கு ஷைத்தான்களை உற்ற நண்பர்களாக நாம் ஆக்கி விட்டோம்.

**அல்குர்ஆன் (7 : 27)**

**நபிமார்களுக்கு விரோதி**

மக்களை வழிகேட்டிற்கு செல்ல விடாமல் நல்வழிபடுத்துவது நபிமார்களின் பணியாகும். இந்தப் பணி ஷைத்தானிற்கு பிடிக்காததும் அவனுக்கு எதிரானதுமாகும். எனவே இப்பணியில் ஈடுபட்ட நபிமார்களுக்கு ஷைத்தான் பல வழிகளில் இடஞ்சல்களை ஏற்படுத்தி இருக்கிறான்.

(முஹம்மதே!) உமக்கு முன் நாம் அனுப்பிய எந்த நபியானாலும், தூதரானாலும் அவர் ஓதும் போது ஷைத்தான் அவரது ஓதுதலில் (தவறான குழப்பத்தைப்) போடாமல் இருந்ததில்லை. எவரது உள்ளங்களில் நோய் இருக்கிறதோ அவர்களுக்கும், கடினசித்தம் கொண்டோருக்கும் ஷைத்தான் போட்டதைச் சோதனையாக ஆக்கிட ஷைத்தான் போட்டதை அல்லாஹ் மாற்றுகிறான். பின்னர் தனது வசனங்களை உறுதிப்படுத்துகிறான். அல்லாஹ் அறிந்தவன்; ஞானமிக்கவன். அநீதி இழைத்தோர் தூரமான பிளவில் உள்ளனர்.

**அல்குர்ஆன் (22 : 52)**

## கெட்ட தோழன்

இஸ்லாமிய விதிமுறைகளை மறந்து தீமைகளில் வீரியமாக ஈடுபடுபவர்களுக்கு ஷைத்தானே தோழனாவான். இவர்களுடைய மனதில் ஷைத்தான் போடுகின்ற தவறான எண்ணங்களுக்கிணங்க இவர்கள் செயல்படுகிறார்கள்.

எதிரியாக பார்க்க வேண்டிய ஷைத்தானை ஆலோசனைக் கூறும் நண்பனைப் போல் கருதி அவன் சொல்லுக்கு கட்டுப்படுவதால் இவர்களுக்கு ஷைத்தான் கெட்ட தோழனாகிவிடுகிறான்.

அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்பாது மக்கள் மெச்சுவதற்காகத் தமது செல்வத்தைச் செலவிடுவோர் (ஷைத்தானின் நண்பர்கள்). யாருக்கு ஷைத்தான் நண்பனாக ஆகி விட்டானோ அவனே கெட்ட நண்பன்.

**அல்குர்ஆன் (4 : 38)**

எவர் அளவற்ற அருளாளனின் அறிவுரையைப் புறக்கணிக்கிறாரோ அவருக்கு ஒரு ஷைத்தானைச் சாட்டுவோம். அவன் அவருக்குத் தோழனாவான். அவர்கள் (நல்) வழியை விட்டும் மக்களைத் தடுக்கின்றனர். தாம் நேர் வழி பெற்றோர் எனவும் எண்ணுகின்றனர்.

முடிவில் அவன் நம்மிடம் வரும் போது “எனக்கும், உனக்கும் இடையே கிழக்கிற்கும், மேற்கிற்கும் இடைப்பட்ட தூரம் இருந்திருக்கக் கூடாதா? நீ கெட்ட தோழனாவாய்” என்று அவன் (ஷைத்தானிடம்) கூறுவான்.

**அல்குர்ஆன் (43 : 36.37.38)**

## ஷைத்தானின் நண்பர்கள்

ஷைத்தானின் விருப்பத்திற்கேற்ப தவறான காரியங்களில் ஈடுபடுபவர்கள் ஷைத்தானின் நண்பர்களாவர்.

சிலருக்கு அவன் நேர் வழி காட்டினான். மற்றும் சிலர் மீது வழி கேடு உறுதியாகி விட்டது. அவர்கள் அல்லாஹ்வையன்றி ஷைத்தான்களை உற்ற நண்பர்களாக்கிக் கொண்டனர். தாங்கள் நேர் வழி நடப்போர் எனவும் எண்ணிக் கொள்கின்றனர்.

**அல்குர்ஆன் (7 : 30)**

அல்லாஹ்வின் பெயர் கூறப்படாததை உண்ணாதீர்கள்! அது குற்றம். உங்களுடன் தர்க்கம் செய்யுமாறு ஷைத்தான்கள் தமது தோழர்களுக்குக் கூறு கின்றனர். நீங்கள் அவர்களுக்குக் கட்டுப் பட்டால் நீங்கள் இணை கற்பிப்பவர்களே.

**அல்குர்ஆன் (6 : 121)**

அல்லாஹ்வையன்றி ஷைத்தானைப் பொறுப்பாளனாக்கிக் கொள்பவன் வெளிப்படையான நஷ்டத்தை அடைந்து விட்டான்.

**அல்குர்ஆன் (4 : 119)**

**ஒவ்வொருவருடனும் இருக்கிறான்**

நபி (ஸல்) அவர்களைத் தவிர்த்து ஷைத்தான் எல்லோரிடமும் இருக்கிறான். இதற்கு நல்லவர்களோ சஹாபாக்களோ விதிவிலக்கில்லை. அனைவரிடமும் இருந்து கொண்டு கெட்ட எண்ணங்களை ஏற்படுத்துவான். நல்லவர்கள் இவன் கூறுவதை புறக்கணித்துவிடுவார்கள். தீயவர்கள் செயல்படுத்துவார்கள்.

நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது : அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம் தங்கியிருந்த நாளில்) ஓர் இரவில் என்னிடமிருந்து புறப்பட்டுச் சென்றார்கள். அவர்கள்மீது எனக்கு ரோஷம் ஏற்பட்டது. பிறகு அவர்கள் (திரும்பி)வந்து என் நடவடிக்கையைக் கண்டபோது, “ஆயிஷா! உனக்கு என்ன நேர்ந்தது? ரோஷம் கொண்டுவிட்டாயா?” என்று கேட்டார்கள். அதற்கு நான், “என்னைப் போன்ற ஒருத்தி (பல துணைவியர் உள்ள) தங்களைப் போன்ற ஒருவர்மீது ரோஷம் கொள்ளாமல் எப்படி இருக்க முடியும்?” என்று சொன்னேன்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “உன் ஷைத்தான் உன்னிடம் வந்து விட்டானா?” என்று கேட்டார்கள். நான், “அல்லாஹ்வின் தூதரே! என்னுடனும் ஷைத்தான் உள்ளானா?” என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ‘ஆம்’ என்றார்கள். “ஒவ்வொரு மனிதனுடனும் (ஷைத்தான்) உள்ளானா?” என்று கேட்டேன். அதற்கும் அவர்கள் ‘ஆம்’ என்றார்கள். நான், “தங்களுடனுமா, அல்லாஹ்வின் தூதரே?” என்று கேட்டேன். அதற்கு அவர்கள், “ஆம். ஆயினும், என் இறைவன் அவனுக்கெதிராக எனக்கு உதவி செய்துவிட்டான். அவன் (எனக்குப்) பணிந்துவிட்டான்” என்று சொன்னார்கள். **நூல் : முஸ்லிம் (5422)**

## உடலில் இரண்டரக் கலந்துள்ளான்

ஷைத்தான் நம் உடலுடன் ஒட்டிக்கொண்டிருக்கிறான் என்றக் கருத்தை பின்வரும் ஹதீஸ்கள் கூறுகின்றன.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : “நிச்சயமாக ஷைத்தான் மனிதனின் ரத்த நாளங்களில் ஊடுருவியிருக்கிறான்.

**அறிவிப்பவர் : ஸஃபிய்யா (ரலி) நூல் : புகாரி (2035)**

உஸ்மான் பின் அபில் ஆஸ் (ரலி) கூறுகிறார்கள் : அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தாயிஃப் நகரத்திற்கு என்னை ஆளுநராக நியமித்தார்கள். நான் தொழுகும் போது வேறு விஷயங்களில் என் கவனம் சென்றுகொண்டிருந்தது. இதனால் நான் எத்தனை ரக்அத்துகள் தொழுதேன் என்பதை கூட மறக்கலானேன். இதை (அடிக்கடி) நான் கண்டபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். நீ அபுல் ஆஸுடைய மகன் (உஸ்மானா?) என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கு நான் ஆம் அல்லாஹ்வின் தூதரே என்றேன். நீங்கள் வந்ததற்கு என்ன காரணம்? என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதரே நான் தொழுகும் போது வேறு விஷயங்களில் என் கவனம் சென்றுகொண்டிருக்கிறது. இதனால் நான் எத்தனை ரக்அத்துகள் தொழுதேன் என்பதை கூட மறந்துவிடுகிறேன் என்று கூறினேன். இது ஷைத்தானால் ஏற்படுகிறது என்று அவர்கள் கூறிவிட்டு அருகில் வா என்றார்கள். நான் நபியவர்களுக்கு அருகில் எனது குதிங்கால்களை ஊன்றி அமர்ந்துகொண்டேன். அவர்களது கரத்தால் என் நெஞ்சில் அடித்து எனது வாயில் உமிழ்ந்தார்கள். **அல்லாஹ்வின் எதிரியே வெளியேறிவிடு என்று கூறினார்கள்.** இவ்வாறு அவர்கள் மூன்று முறை செய்துவிட்டு உன் பணியை துவங்கு என்று (என்னிடம்) கூறினார்கள்.

**நூல் : இப்னு மாஜா (3538)**

அல்லாஹ்வின் எதிரியே வெளியேறிவிடு என்று நபி (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள். ஷைத்தான் உஸ்மான் என்ற இந்த நபித்தோழரின் உடலில் இருந்து கொண்டு தொழுகையில் கவனத்தைத் திருப்பும் வேலையை செய்துள்ளான் என்பதை இதிலிருந்து அறிய முடிகிறது.

## ஷைத்தானை விரட்டும் பெயரில் பித்தலாட்டம்

ஷைத்தானால் ஏற்படும் தீங்குகளுக்கு அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தல் தொழுதல் திக்ரு செய்தல் குர்ஆன் வசனங்களை ஓதுதல் இவற்றைத் தவிர வேறு வழியில்லை. ஆனால் ஷைத்தானை விரட்டுகிறோம் எனக் கூறிக்கொண்டு மக்களிடமிருந்து பொருளாதாரத்தைச் சுரண்டக்கூடியவர்கள் சமுதாயத்தில் இருக்கின்றனர். சரியான நம்பிக்கை உள்ளவர்கள் இது போன்ற ஏமாற்றுப்பேர்வழிகளிடம் ஏமாறமாட்டார்கள்.

இவர்கள் தங்களின் வாதத்தில் உண்மையாளர்களாக இருந்தால் ஷைத்தானை விரட்டிய பிறகு இவர்கள் யாரிடமிருந்து ஷைத்தானை விரட்டினார்களோ அவர்களுக்கு ஹதீஸ்களில் சொல்லப்பட்ட இடஞ்சல்கள் ஏற்படாது என்ற உத்தரவாதத்தை தர முடியுமா?

தொழுகையில் கவனம் திரும்புவது கொட்டாவி விடுவது சுப்ஹு தொழாமல் உறங்குவது இவையெல்லாம் ஷைத்தானால் ஏற்படுவதாக ஹதீஸ்களில் சொல்லப்பட்டுள்ளது. அப்படியென்றால் இவர்கள் யாரிடமிருந்து ஷைத்தானை விரட்டினார்களோ அவர்களுக்கு தொழுகையில் கவனம் திரும்பாதா? அவர்களுக்கு இனி கொட்டாவியே வராதா? அவர்கள் சுப்ஹு தொழுகையை விடாமல் கடைபிடிப்பார்களா? ஷைத்தானை விரட்டிய பிறகு இவர்களுக்குத் தவறான எண்ணங்களே ஏற்படாதா? இந்த அடிப்படையில் சிந்தித்துப் பார்த்தாலே ஷைத்தானை விரட்டுவதாக இவர்கள் கூறுவது வடிகட்டியப் பொய் என்பதை அறியலாம்.

**அனைவரிடமிருந்தும் ஷைத்தானை விரட்டுவார்களா?**

ஷைத்தான் நல்லவர்கள் கெட்டவர்கள் என்ற வித்தியாசம் இல்லாமல் அனைவருக்கும் தவறான எண்ணங்களை ஏற்படுத்துகிறான். அப்படியென்றால் ஷைத்தானை விரட்டுவதாக கூறும் போலி ஆண்மீகவாதிகள் அனைத்து மக்களுக்கும் ஓதிப்பார்த்து அவர்களிடமிருந்து ஷைத்தானை விரட்டுவார்களா?

நபிமார்களுக்கு ஷைத்தான் இடஞ்சல் தந்ததாக திருக்குர்ஆன் கூறுகிறது. இன்றைக்கு இவர்களுக்கு ஷைத்தானை விரட்டத் தெரிந்த யுக்தி நபிமார்களுக்கு ஏன் தெரியவில்லை என்று நாம் சிந்தித்துப்பார்க்க வேண்டும்.

இவ்வாறே மனிதர்களிலும், ஜின்களிலும் உள்ள ஷைத்தான்களை ஒவ்வொரு நபிக்கும் பகைவர்களாக ஆக்கினோம்.

**அல்குர்ஆன் (6 : 112)**

(முஹம்மதே!) உமக்கு முன் நாம் அனுப்பிய எந்த நபியானாலும், தூதரானாலும் அவர் ஓதும் போது ஷைத்தான் அவரது ஓதுதலில் (தவறான குழப்பத்தைப்) போடாமல் இருந்ததில்லை.

**அல்குர்ஆன் (22 : 52)**

**ஷைத்தான் வலையில் விழுந்தவர்கள் ஷைத்தானை விரட்டுகிறார்களா?**

ஷைத்தான்கள் யார் மீது இறங்குவார்கள் என்பதை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? இட்டுக்கட்டும் ஒவ்வொரு பாவியின் மீதும் இறங்குகின்றனர்.

**அல்குர்ஆன் (26 : 221)**

ஷைத்தானை விரட்டுவதாக கூறுபவர்கள் மார்க்கத்தில் இல்லாத ஒரு விஷயத்தை இருப்பதாக இட்டுக்கட்டிக்கொண்டிருக்கிறார்கள். இத்தகையவர்களிடத்தில் தான் ஷைத்தான் இருக்கிறான்.

ஷைத்தானின் வலையில் சிக்கியவர்கள் மற்றவர்களிடமிருந்து ஷைத்தானை விரட்டுவதாக நினைப்பது எவ்வளவு அறிவீனம் என்பதை பொதுமக்கள் சிந்திக்க வேண்டும். ஏமாற்றுபவர்களின் சதியில் சிக்கி தங்கள் பொருளையும் அறிவையும் இழந்துவிட வேண்டாம்.

**தீய எண்ணங்களை ஏற்படுத்துவான்**

ஷைத்தான் மனிதர்களிடம் தவறான எண்ணங்களை ஏற்படுத்தி தீய காரியங்களின் பால் அழைத்துக்கொண்டிருக்கிறான். அவன் ஏற்படுத்திய எண்ணத்திற்கு கட்டுப்படுபவர்கள் தீமையை செய்துவிடுகிறார்கள். அவனது ஆசை வார்த்தைக்கு மயங்காதவர்கள் நன்மையின் பால் விரைகிறார்கள்.

மனிதன் தான் ஷைத்தானிற்கு கட்டுப்பட்டு தவறிழைக்கிறானேத் தவிர ஷைத்தான் யாரையும் வழுக்கட்டாயமாக அவர்கள் விரும்பாமல் தீமைக்கு அழைத்துச் செல்வதில்லை. அதுபோன்று நல்ல விஷயங்களை வெறுப்பிற்குரியதாக நமக்குக் காட்டுவானேத் தவிர நன்மையான காரியங்களை செய்யவிடாமல் ஷைத்தான் யாரிடத்திலும் சண்டைக்குவர மாட்டான். இதை நாம் நமது வாழ்க்கையில் ஒவ்வொருவரும் அனுபவித்து வருகிறோம்.

“அவர்களை வழி கெடுப்பேன்; அவர்களுக்கு(த் தவறான) ஆசை வார்த்தை கூறுவேன்; அவர்களுக்குக் கட்டளையிடுவேன்; அவர்கள் கால்நடைகளின் காதுகளை அறுப்பார்கள். (மீண்டும்) அவர்களுக்குக் கட்டளையிடுவேன்; அல்லாஹ் வடிவமைத்ததை அவர்கள்

மாற்றுவார்கள்” (எனவும் கூறினான்). அல்லாஹ்வையன்றி ஷைத்தானைப் பொறுப்பாளனாக்கிக் கொள்பவன் வெளிப்படையான நஷ்டத்தை அடைந்து விட்டான்.

**அல்குர்ஆன் (4 : 119)**

அவன் தீமையையும், வெட்கக் கேடானதையும், நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின் மீது இட்டுக்கட்டுவதையும் உங்களுக்குத் தூண்டுகிறான்.

**அல்குர்ஆன் (2 : 169)**

அவன் மனிதர்களின் உள்ளங்களில் தீய எண்ணங்களைப் போடுகிறான்.

**அல்குர்ஆன் (114 : 5)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இப்லீஸ், தனது சிம்மாசனத்தை (கடல்) நீரின் மீது அமைக்கிறான். பிறகு தன் பட்டாளங்களை (மக்களிடையே) அனுப்புகிறான். அவர்களில் மிகப் பெரும் குழப்பத்தை ஏற்படுத்துகின்ற (ஷைத்தான் எவனோ அ)வனே இப்லீஸிடம் மிகவும் நெருங்கிய அந்தஸ்தைப் பெறுகிறான். அவனிடம் ஷைத்தான்களில் ஒருவன் (திரும்பி)வந்து “நான் இன்னின்னவாறு செய்தேன்” என்று கூறுவான்.

அப்போது இப்லீஸ், “(சொல்லிக்கொள்ளும் அளவுக்கு) நீ எதையும் செய்யவில்லை” என்று கூறுவான். பிறகு அவர்களில் மற்றொருவன் வந்து, “நான் ஒரு மனிதனுக்கும் அவனுடைய மனைவிக்கும் இடையே பிரிவை ஏற்படுத்தாமல் அவனை நான் விட்டுவைக்கவில்லை” என்று கூறுவான். அப்போது இப்லீஸ், அவனை அருகில் வரச் செய்து, “நீதான் சரி(யான ஆள்)” என்று (பாராட்டிக்) கூறுவான்.

**அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (5419)**

**ஜின்களும் ஷைத்தான்களும் ஒன்றா?**

ஒட்டு மொத்த ஜின் இனத்தையும் ஷைத்தான்கள் என்று குறிப்பிடும் வழக்கத்தை ஹதீஸ்களில் நம்மால் காணமுடிகிறது. குர்ஆனிலும் ஹதீஸ்களிலும் பொதுவாக ஜின்களை குறிப்பதற்கு ஷைத்தான்கள் என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஜின்கள், மனிதர்கள், பறவைகள் ஆகியவற்றின் படைகள் ஸுலைமானுக் காகத் திரட்டப்பட்டு, அவர்கள் அணி வகுக்கப்பட்டனர்.

**அல்குர்ஆன் (27 : 17)**

ஸுலைமானுக்குக் காற்றை வசப்படுத்தினோம். அதன் புறப்பாடு ஒரு மாதமாகும். அதன் திரும்புதல் ஒரு மாதமாகும். அவருக்காக செம்பு ஊற்றை ஓடச் செய்தோம். தனது இறைவனின் விருப்பப்படி அவரிடம் பணியாற்றும் ஜின்களும் இருந்தனர். அவர்களில் நமது கட்டளையை யாரேனும் புறக்கணித்தால் நரகின் வேதனையை அவருக்கு சுவைக்கச் செய்வோம்.

**அல்குர்ஆன் (34 : 12)**

மேற்கண்ட இரு வசனங்களிலும் சுலைமான் நபிக்கு ஜின்களை வசப்படுத்திக்கொடுத்ததாக அல்லாஹ் கூறுகிறான். இதேக் கருத்தை அல்லாஹ் திருக்குர்ஆனில் வேற இடங்களில் கூறும் போது ஜின்கள் என்று குறிப்பிடுவதற்கு பதிலாக ஷைத்தான்கள் என்று கூறுகிறான். இதை பின்வரும் வசனங்கள் தெளிவுபடுத்துகிறது.

அவருக்குக் காற்றை வசப்படுத்திக் கொடுத்தோம். அவரது கட்டளைப் படி அவர் நினைத்தவாறு பணிந்து அது சென்றது. **ஷைத்தான்களில்** கட்டடம் கட்டுவோரையும், முத்துக் குளிப்போரையும், விலங்கிடப்பட்ட வேறு சிலரையும் (அவருக்கு) வசப்படுத்திக் கொடுத்தோம்.

**அல்குர்ஆன் (38 : 36)**

**ஷைத்தான்களில்** அவருக்காக முத்துக்குளிப்போரையும், அது தவிர வேறு பணியைச் செய்வோரையும் (வசப்படுத்திக்) கொடுத்தோம். நாம் அவர்களைக் கண்காணிப்போராக இருந்தோம்.

**அல்குர்ஆன் (21 : 82)**

இவ்விருவசனங்களும் ஜின்களை ஷைத்தான்கள் என்று குறிப்பிடுகிறது. ஜின்களை ஷைத்தான்கள் என்று குறிப்பிடலாம் என்பதை தெளிவாக இதன் மூலம் அறியமுடிகிறது.

மனிதர்களின் ஆதிப்பிதாவாக ஆதம் (அலை) அவர்கள் இருப்பது போல் ஜின்களின் ஆதிப்பிதா ஷைத்தானாகும். ஜின்கள் அனைவரும் ஷைத்தானின் வழிதோன்றலாகும். ஜின்கள்

அனைவரும் ஷைத்தானின் வழிதோன்றலாக இருப்பதால் தான் அல்லாஹ் ஜின்களுக்கு ஷைத்தான்கள் என்ற பெயரை சூட்டுகிறான்.

ஜின் இனத்தை கூறும் போது ஷைத்தான்கள் என்று ஹதீஸ்களிலும் குறிப்பிடப்படுகிறது. இதை பின்வரும் ஹதீஸ்களில் பார்க்கலாம்.

நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்கள் சிலருடன் 'உ(க்)காழ்' எனும் சந்தையை நோக்கிச் சென்றார்கள். (இந்த நேரத்தில்) ஷைத்தான்களுக்கும் வானுலகச் செய்திகளுக்குமிடையே திரையிடப்பட்டு (அச்செய்திகளைக் கேட்கவிடாமல் ஷைத்தான்கள் தடுக்கப்பட்டு)விட்டது. (வானுலகச் செய்திகளை ஒட்டுக் கேட்கச் சென்ற) ஷைத்தான்கள் மீது விண் கொள்ளிகள் ஏவிவிடப்பட்டன. (ஒட்டுக்கேட்கச் சென்ற) அந்த ஷைத்தான்கள் (ஒரு செய்தியும் கிடைக்காமல்) தம் கூட்டத்தாரிடம் திரும்பி வந்தனர். அப்போது அக்கூட்டத்தார்கள், "உங்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டனர். ஷைத்தான்கள், "வானத்துச் செய்திகளுக்கும் எங்களுக்குமிடையே திரையிடப்பட்டுவிட்டது; எங்கள் மீது விண்கொள்ளிகள் ஏவிவிடப்பட்டன" என்று பதிலளித்தனர். "புதியதொரு நிகழ்ச்சி ஏதேனும் சம்பவித்திருக்கும். அதுவே உங்களுக்கும் வானத்துச் செய்திகளுக்குமிடையே தடையாக அமைந்திருக்க வேண்டும். எனவே, நீங்கள், பூமியின் கீழ்த்திசை, மேல்திசை (என நாலா பாகங்களிலும் பரவிச்) சென்று புதிதாக நிகழ்ந்துவிட்ட இ(ந்த சம்பவத்)தை என்னவென்று ஆராயுங்கள்" என்றனர்.

அவ்வாறே அந்த ஷைத்தான்கள் திரும்பிச் சென்றனர். (அவர்கள் எல்லாத் திசைகளையும் ஆராய்ந்தபடி) திஹாமா எனும் (மக்கா) பகுதியை நோக்கி வந்தபோது, 'உகாழ்' சந்தையை நோக்கிச் சென்றுகொண்டிருந்த நபி (ஸல்) அவர்கள் 'நக்லா' எனுமிடத்தில் தம் தோழர்களுக்கு ஃபஜ்ர் தொழுகையைத் தொழுவித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது ஓதப்பட்ட குர்ஆன் வசனங்களை அந்த ஷைத்தான்கள் கவனமாகச் செவிகொடுத்துக் கேட்டனர். அப்போது ஷைத்தான்கள் (தங்களுக்கிடையில்) அல்லாஹ்வின் மீதாணையாக! வானத்துச் செய்திகளை (கேட்கமுடியாமல்) உங்களைத் தடுத்தது இதுதான்" என்று கூறிவிட்டு, தம் கூட்டத்தாரிடம் திரும்பிச் சென்று, "எங்கள் கூட்டாத்தாரே! திண்ணமாக நாங்கள் ஆச்சரியமானதொரு குர்ஆனை செவிமடுத்தோம். அது நேர்வழியைக் காட்டுகின்றது. எனவே இறைவனுக்கு (இனி) நாங்கள் (ஒரு போதும்) யாரையும் இணையாகக் கருதமாட்டோம்" என்று கூறினர். (இதையொட்டி) அல்லாஹ் தன் தூதருக்கு "நபியே! நீர் கூறுக: வஹீ மூலம் எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளது..." என்று தொடங்கும் (இந்த 72ஆவது அத்தியாயத்தை)அருளினான்.

ஜின்கள் (தம் கூட்டத்தாரிடம்) கூறியதைப் பற்றி 'வஹி'யின் மூலம்தான் நபி (ஸல்) அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (773)**

வானுலகத்தில் வானவர்கள் பேசிக்கொள்ளும் செய்தியை ஒட்டுக்கேட்பதற்காக ஜின்கள் சென்றன என்று குர்ஆனும் ஹதீஸ்களும் கூறுகிறது. இந்த ஜின்களில் குர்ஆனை செவிமடுத்து அல்லாஹ்வை ஈமான் கொண்ட ஜின்களும் உண்டு. மேற்கண்ட ஹதீஸில் ஜின்கள் என்று கூறுவதற்கு பதிலாக ஷைத்தான்கள் என்று கூறப்பட்டுள்ளது.

ஜின்கள் ஷைத்தானுடைய வழிதோன்றல்கள் என்பதால் தான் ஜின்களை பொதுவாக ஷைத்தான்கள் என்று குறிப்பிடும் வழக்கம் உள்ளது என்பதை அறியலாம்.

## கெட்ட ஜின்களும் ஷைத்தான்களும் ஒன்றா?

ஷைத்தான்கள் எனப்படுபவர்கள் ஜின்களில் கெட்டவர்கள் தான் என்று சிலர் கூறுகிறார்கள். இதற்கு மாற்றமாக கெட்ட ஜின்கள் வேறு. ஷைத்தான் வேறு என்றக் கருத்தையும் சிலர் கூறுகிறார்கள். இவ்விரண்டில் கெட்ட ஜின்களும் ஷைத்தான்களும் ஒன்றே என்றக் கருத்துத் தான் சரியானதாகும்.

நல்ல ஜின்களுக்கு ஷைத்தான்கள் என்ற இப்பெயரை சூட்டாமல் கெட்ட ஜின்களை குறிப்பிடும் போது மட்டும் இப்பெயரை கூறும் வழக்கமும் உள்ளது. ஷைத்தானிடத்தில் இருக்கின்ற கெட்ட குணம் இருப்பதால் கெட்ட குணம் உள்ள ஜின்களுக்கு ஷைத்தான்கள் என்று கூறப்படுகிறது. இதை பின்வரும் வசனத்திலிருந்து விளங்கலாம்.

இவ்வாறே மனிதர்களிலும், ஜின்களிலும் உள்ள ஷைத்தான்களை ஒவ்வொரு நபிக்கும் பகைவர்களாக ஆக்கினோம். ஏமாற்றுவதற்காக கவர்ச்சி கரமான சொற்களை அவர்களில் ஒருவர் மற்றவருக்கு அறிவிக்கின்றனர். (முஹம்மதே) உமது இறைவன் நாடியிருந்தால் அவர்கள் இதைச் செய்திருக்க மாட்டார்கள். அவர்கள் இட்டுக் கட்டுவதோடு அவர்களை விட்டு விடுவீராக!

**அல்குர்ஆன் (6 : 112)**

ஜின்களிலும் மனிதர்களிலும் நபிமார்களுக்கு இடஞ்சல் கொடுத்த தீயவர்களை ஷைத்தான்கள் என்று அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான். கெட்ட ஜின்கள் என்பதும் ஷைத்தான்கள் என்பதும் ஒன்று என்பதை இதன் மூலம் அறியலாம்.

**மனிதனாக உருமாறுவானா?**

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் ஷைத்தான் மனித வடிவில் வந்துள்ளான்.

**அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்** : நபி (ஸல்) அவர்கள் ரமளானுடைய (ஃபித்ரா) ஸகாத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை என்னிடம் கொடுத்தார்கள். அப்போது ஒருவன் இரவில் வந்து உணவுப் பொருட்களை அள்ளலானான். அவனை நான் பிடித்து, உன்னை நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப் போகிறேன்! என்று கூறுகிறேன். அதற்கவன், நான் ஒரு ஏழை! எனக்குக் குடும்பம் இருக்கிறது; கடும் தேவையும் இருக்கிறது! என்று கூறினான். அவனை நான் விட்டுவிட்டேன். விடிந்ததும் நபி (ஸல்) அவர்கள், அபூஹுரைராவே! நேற்றிரவு உம்மால் பிடிக்கப்பட்டவன் என்ன செய்தான்? என்று கேட்டார்கள். நான், அல்லாஹ்வின் தூதரே! தான் கடுமையான வறுமையில் இருப்பதாகவும் தனக்குக் குடும்பம் இருப்பதாகவும் அவன் முறையிட்டான்; ஆகவே, இரக்கப்பட்டு அவனை விட்டுவிட்டேன்! என்றேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் நிச்சயமாக அவன் பொய் சொல்யிருக்கிறான்! மீண்டும் அவன் வருவான்! என்றார்கள். மீண்டும் வருவான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதால் அவன் மீண்டும் வருவான் என்று நம்பி அவனுக்காக (அவனைப் பிடிப்பதற்காகக்) காத்திருந்தேன். அவன் வந்து உணவுப் பொருட்களை அள்ளத் தொடங்கிய போது அவனைப் பிடித்தேன். உன்னை நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப்போகிறேன்! என்று கூறினேன். அதற்கவன், என்னை விட்டுவிடு! நான் ஒரு ஏழை! எனக்கு குடும்பமிருக்கிறது; இனி நான் வரமாட்டேன்! என்றான். அவன்மேல் இரக்கப்பட்டு அவனை விட்டுவிட்டேன். விடிந்ததும், நபி (ஸல்) அவர்கள் அபூஹுரைராவே! உம்மால் பிடிக்கப்பட்டவன் என்ன செய்தான்? என்று கேட்டார்கள்.

நான், அல்லாஹ்வின் தூதரே! அவன் (தனக்குக்) கடும் தேவையும் குடும்பமும் இருப்பதாக முறையிட்டான்; ஆகவே, அவன் மேல் இரக்கப்பட்டு அவனை விட்டுவிட்டேன்! என்றேன். நிச்சயமாக அவன் உம்மிடம் பொய் சொல்யிருக்கிறான்; திரும்பவும் உம்மிடம் வருவான்! என்றார்கள். மூன்றாம் தடவை அவனுக்காகக் காத்திருந்தபோது, அவன் வந்து

உணவுப் பொருட்களை அள்ளத் தொடங்கினான். அவனைப் பிடித்து, உன்னை நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப் போகிறேன்( (ஒவ்வொரு முறையும்) இனிமேல் வரமாட்டேன்! என்று சொல்விட்டு, மூன்றாம் முறையாக நீ மீண்டும் வந்திருக்கிறாய்! என்று கூறினேன்.

அதற்கவன், என்னை விட்டுவிடும்! அல்லாஹ் உமக்குப் பயனளிக்கக்கூடிய சில வார்த்தைகளைக் கற்றுத் தருகிறேன்! என்றான். அதற்கு நான், அந்த வார்த்தைகள் என்ன? என்று கேட்டேன். நீர் படுக்கைக்குச் செல்லும்போது ஆயத்துல் குர்சியை ஆரம்பத்திலிருந்து கடைசி வரை ஓதும்! அவ்வாறு செய்தால், விடியும்வரை அல்லாஹ்வின் தரப்பிலிருந்து உம்மைப் பாதுகாக்கின்ற (வானவர்) ஒருவர் இருந்து கொண்டேயிருப்பார்; ஷைத்தானும் உம்மை நெருங்க மாட்டான்! என்றான். அவனை நான் விட்டுவிட்டேன். விடிந்ததும் நபி (ஸல்) அவர்கள் நேற்றிரவு உம்மால் பிடிக்கப்பட்டவன் என்ன செய்தான்? என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதரே அல்லாஹ் எனக்குப் பயனளிக்கக் கூடிய சில வார்த்தைகளைக் கற்றுத் தருவதாக அவன் கூறினான்; அதனால் அவனை விட்டுவிட்டேன்! என்றேன். அந்த வார்த்தைகள் என்ன? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். நீர் படுக்கைக்குச் செல்லும்போது ஆயத்துல் குர்சியை ஆரம்பம் முதல் கடைசிவரை ஓதும்! அவ்வாறு ஓதினால், விடியும் வரை அல்லாஹ்வின் தரப்பிலிருந்து உம்மைப் பாதுகாக்கின்ற(வானவர்) ஒருவர் இருந்துகொண்டேயிருப்பார்; ஷைத்தானும் உம்மை நெருங்க மாட்டான்! என்று என்னிடம் அவன் கூறினான் எனத் தெரிவித்தேன். -நபித் தோழர்கள் நன்மையான(தைக் கற்றுக் கொண்டு செயல்படுத்துவ)தில் அதிக ஆர்வமுடையவர்களாக இருந்தனர்- அப்போது நபி (ஸல்) அவர்கள், அவன் பெரும் பொய்யனாக இருந்தாலும் உம்மிடம் உண்மையைத்தான் அவன் சொல்யிருக்கின்றான்! மூன்று இரவுகளாக நீர் யாரிடம் பேசி வருகிறீர் என்று உமக்குத் தெரியுமா? என்று கேட்டார்கள். தெரியாது! என்றேன். **அவன்தான் ஷைத்தான்!** என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**நூல் : புகாரி (2311)**

அபூஹுரைரா(ரலி) அவர்களிடம் வந்தவன் உண்மையில் ஷைத்தான் அல்ல. அவன் ஒரு தீய மனிதன் ஆவான். கெட்டவர்களை ஷைத்தான்கள் எனக் கூறும் வழக்கம் உள்ளதால் இவ்வாறு புரிந்துகொள்ள வேண்டும் என சிலர் விளக்கம் தருகின்றனர். இது தவறான விளக்கமாகும்.

இந்த விளக்கம் இச்செய்தியுடன் எந்த வகையில் ஒத்துப்போகவில்லை. அபூஹுரைரா(ரலி) அவர்களிடம் வந்தவன் தீய மனிதன் அல்ல. உண்மையான ஷைத்தானே வந்தான்.

இச்சம்பவத்தின் இறுதியில் உன்னிடம் பேசியவன் யார் தெரியுமா? என நபி (ஸல்) அவர்கள் கேட்க அதற்கு அபூஹுரைரா(ரலி) தெரியாது எனக் கூறுகிறார்கள். இதன்பின்னே நபி(ஸல்) அவர்கள் அவன்தான் ஷைத்தான் எனக் கூறுகிறார்கள்.

வந்தவன் தீயவன் என்பதை அபூஹுரைரா(ரலி) அவர்கள் நன்கு அறிந்துள்ளார்கள். மும்முறை அவன் திருட வந்ததால் அவன் தீயவன் என்பது அபூஹுரைரா(ரலி) அவர்களுக்கு நன்கு தெரியும். பிறகு ஏன் நபி (ஸல்) அவர்கள் அவன்தான் ஷைத்தான் எனக் கூற வேண்டும்?

ஆயத்துல் குர்சியை ஓதினால் ஷைத்தான் நெருங்கமாட்டான் என்றத் தகவல் ஆயிரக்கணக்கான ஹதீஸ்களை மனனமிட்டிருந்த அபூஹுரைரா(ரலி) உட்பட எந்த நபித்தோழரும் அறிந்திருக்கவில்லை. இந்நிலையில் இதை திருடவந்தவன் சொல்லித்தருகிறான் என்றால் அவன் சாதாரண மனிதனாக இருக்க முடியாது. தனக்கு ஆயத்துல் குர்சீ தடையாக இருப்பதை நன்குணர்ந்த உண்மை ஷைத்தானாகவே இருக்க முடியும்.

மேலும் இது தொடர்பாக வரும் வேறு ஹதீஸ்களில் வந்தவன் ஜின் இனத்தைச் சார்ந்தவன். அபூஹுரைரா(ரலி) அவர்களின் கண்ணில்படாமல் அவன் மறைந்தான். முஹம்மது (ஸல்) அவர்களுக்காக அல்லாஹ் இவனை அபூஹுரைரா(ரலி) அவர்களின் கண்ணில் காட்டினான் என்று இடம்பெற்றுள்ளது. இவையனைத்தும் வந்தவன் தீய மனிதன் என்ற விளக்கத்தை நிராகரிக்கின்றது.

**நாய் வடிவில் வருவானா?**

அபூதர் அல்கிஃபாரீ (ரலி) அவர்கள், “உங்களில் ஒருவர் (திறந்தவெளியில்) தொழ நிற்கும் போது தமக்கு முன்னால் வாகன (ஒட்டக)த்தின் (சேணத்திலுள்ள) சாய்வுக்கட்டை போன்றது இருந்தால் அதுவே அவருக்குத் தடுப்பாக அமைந்துவிடும். சாய்வுக்கட்டை போன்றது இல்லாவிட்டால் கழுதை, பெண் மற்றும் கறுப்புநாய் ஆகியன அவரது (கவனத்தை ஈர்த்து) தொழுகையை முறித்துவிடும்” என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றார்கள்.

உடனே நான், “அபூதர் (ரலி) அவர்களே! சிவப்பு நிற நாய், மஞ்சள் நிற நாய் ஆகியவற்றை விட்டுவிட்டுக் கறுப்பு நிற நாயை மட்டுமே குறிப்பிடக் காரணம் என்ன?” என்று

கேட்டேன். அதற்கு அவர்கள், “என் சகோதரரின் புதல்வரே! நீங்கள் என்னிடம் கேட்டதைப் போன்றே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் **“கறுப்பு நாய் ஷைத்தான்** ஆகும்” என்று கூறினார்கள் என்றார்கள்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்)**

**நூல் : முஸ்லிம் (882)**

இந்த செய்தியில் கறுப்பை நாயை நபி (ஸல்) அவர்கள் ஷைத்தான் எனக் கூறியுள்ளார்கள். கறுப்பு நாய் மிகவும் தீங்கான உயிரினம் என்ற அடிப்படையில் இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் கூறியதாக சிலர் விளக்கம் தருகின்றனர். இந்த ஹதீஸிற்கு இவ்வாறு மாற்று விளக்கம் தர வேண்டிய அவசியமில்லை. இதை நேரடிப் பொருளில் புரிவதே சரியானது.

பொதுவாக நாய்கள் அனைத்தும் தீங்கானவையாகும். அவற்றில் நிறத்தைப் பொறுத்து தீங்கின் அளவு வேறுபடுவதில்லை. அவ்வாறிருக்க கறுப்பு நாயை மட்டும் ஷைத்தான் என நபி(ஸல்) அவர்கள் கூறுகிறார்கள் என்றால் அதன் சரியான பொருளை சிந்திக்க வேண்டும்.

கறுப்பு நாய் தீங்கானது என்றால் மற்ற நாய்கள் நன்மை தரக்கூடியவைகளா? எனவே கறுப்பு நாய் தீங்கானது என்ற அர்தத்தில் இதை நபியவர்கள் கூறியிருக்கமாட்டார்கள். ஜின்களில் ஒரு பிரிவினர் நாய்களாக இருப்பதாக பின்வரும் ஹதீஸ் கூறுகிறது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஜின்களில் மூன்று வகையினர் இருக்கிறார்கள். இவர்களில் ஒரு வகையினருக்கு இறக்கைகள் உண்டு. இவர்கள் காற்றில் பறந்து செல்வார்கள். **நாய்களும் பாம்புகளும் இன்னொரு வகையினராகும்.** இன்னொரு வகையினர் (ஆங்காங்கே) தங்கிக்கொண்டும் (வேறு இடங்களுக்கு) பயனித்துக்கொண்டும் இருப்பார்கள்.

**அறிவிப்பவர் : அபூ ஸஃலபா (ரலி)**

**நூல் : முஷ்கிலுல் ஆஸார் (2473)**

எனவே கறுப்பு நாய் ஷைத்தான் என்பதற்கு மாற்று விளக்கம் தராமல் அதை அதன் நேரடிப் பொருளில் புரிவதால் எந்தப் பிரச்சனையுமில்லை.

இச்செய்தியில் கூறப்படும் தகவலை ஆயிஷா (ரலி) அவர்கள் மறுத்துள்ளார்கள் என்பதை சிலர் சுட்டிக்காட்டுகின்றனர்.

மஸ்ரூக் பின் அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் :

ஆயிஷா (ரலி) அவர்களிடம் தொழுகையை முறிப்பவை குறித்துப் பேசப்பட்டது. –"நாயும் கழுதையும் பெண்ணும் (தொழுபவருக்கு குறுக்கே செல்வது தொழுகையை முறித்துவிடுவன" என்று கூறினர்.). அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், "(பெண்களாகிய) எங்களை கழுதைகளுக்கும் நாய்களுக்கும் ஒப்பாக்கிவிட்டீர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் நபி (ஸல்) அவர்களுக்கும் (அவர்களின்) கிப்லாவுக்குமிடையே கட்டிலில் படுத்துக்கொண்டிருக்க, நபி (ஸல்) அவர்கள் தொழுதுகொண்டிருப்பார்கள். அப்போது எனக்கு ஏதேனும் தேவையேற்பட்டால் நபி (ஸல்) அவர்களுக்கு முன்னால் அமர்ந்து அவர்களுக்கு இடையூறு செய்யப் பிடிக்காமல் கட்டிலின் இரு கால்களினூடே நான் நழுவிச் சென்றுவிடுவேன்" என்று கூறினார்கள்.

**நூல் : புகாரி (514)**

தொழக்கூடியவர் தனக்கு முன்னால் கட்டை போன்ற பொருளை தடுப்பாக அமைக்க வேண்டும். இதைச் செய்ய தவறுபவர்களுக்கு தண்டனையாகவே அவர்களின் தொழுகையை நாய் கழுதை பெண் ஆகியவவை முறித்துவிடும் என சொல்லப்பட்டுள்ளது.

தொழுகை முறித்து விடும் என்றால் தொழுகை பாழாகிவிடும் என்பது இதன் பொருள்ள அல்ல. தொழுகையில் நம் கவனத்தை திசைதிருப்பி நாம் அடையவிருந்த நன்மையை தடுத்துவிடும். எனவே தொழக்கூடியவர்கள் தனக்கு முன் தடுப்பை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் என்பது இதன் பொருளாகும்.

ஒருவர் வீட்டினுல் தொழும்போது தம் மனைவி குறுக்கே படுத்திருந்தால் அவருடைய தொழுகை முறியாது. தடுப்பில்லாமல் தொழும் போது அந்நியப் பெண் குறுக்கே செல்வதும் வீட்டில் மனைவி குறுக்கே படுப்பதும் ஒன்றல்ல.

**பாம்பு வடிவில் வருவானா?**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மதீனாவில் இஸ்லாத்தைத் தழுவிய ஜின்கள் சில உள்ளன. உங்களில் ஒருவர், அவற்றில் எதையேனும் இந்தக் குடியிருப்புகளில் (பாம்பின் உருவில்) கண்டால் மூன்று நாட்கள் அவற்றுக்கு அவர் அறிவிப்புச் செய்யட்டும். அதற்குப் பின்னரும் அது அவருக்குத் தென்பட்டால், அதைக் கொன்றுவிடட்டும்! ஏனெனில், அது ஷைத்தான் ஆகும்.

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : முஸ்லிம் (4504)**

ஷைத்தான் பாம்பு வடிவில் வரலாம் என்பதை இச்செய்தி தெளிவாக விவரிக்கின்றது. பின்வரும் ஹதீஸிலும் இக்கருத்தை கூறப்பட்டுள்ளது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஜின்களில் மூன்று வகையினர் இருக்கிறார்கள். இவர்களில் ஒரு வகையினருக்கு இறக்கைகள் உண்டு. இவர்கள் காற்றில் பறந்து செல்வார்கள். **நாய்களும் பாம்புகளும் இன்னொரு வகையினராகும்.** இன்னொரு வகையினர் (ஆங்காங்கே) தங்கிக்கொண்டும் (வேறு இடங்களுக்கு) பயனித்துக்கொண்டும் இருப்பார்கள்.

**அறிவிப்பவர் : அபூ ஸஃலபா (ரலி)**

**நூல் : முஷ்கிலுல் ஆஸார் (2473)**

ஷைத்தான்களும் ஜின்களும் நமக்கு மறைமுகமானவர்கள். இவர்கள் விசயத்தில் குர்ஆன் ஹதீஸில் சொல்லப்பட்ட கருத்துக்களை நிராகரிக்காமலும் சுய விளக்கம் தராமலும் அப்படியே ஏற்பதே ஒரு முஸ்லிமின் கடமையாகும். இவ்வாறு நம்புவதால் இவற்றை காணும் போது நாம் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடிக்கொள்வோம்.

**பூனை வடிவில் வருவானா?**

பூனை வடிவில் ஷைத்தான் வருவான் என்பதற்கு குர்ஆன் ஹதீஸில் எந்த ஆதாரமும் நமக்கு கிடைக்கவில்லை.

## ஷைத்தானின் சூழ்ச்சிகள்

### தீயவற்றை அலங்கரித்துக்காட்டுவான்

அவர்களுக்கு நமது வேதனை வந்ததும் அவர்கள் பணிந்திருக்க வேண்டாமா? மாறாக அவர்களின் உள்ளங்கள் இறுகி விட்டன. அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றை ஷைத்தான் அவர்களுக்கு அழகாக்கிக் காட்டினான்.

**அல்குர்ஆன் (6 : 43)**

அல்லாஹ்வின் மீது ஆணையாக! உமக்கு முன் சென்ற சமுதாயங்களுக்குத் தூதர்களை அனுப்பினோம். அவர்களது செயல்களை ஷைத்தான் அழகாக்கிக் காட்டினான். இன்னும் அவனே இன்று அவர்களின் உற்ற நண்பன். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு.

**அல்குர்ஆன் (16 : 63)**

அவளும், அவளது சமுதாயமும் அல்லாஹ்வையன்றி சூரியனுக்கு ஸஜ்தா செய்யக் கண்டேன். அவர்களின் செயல்களை ஷைத்தான் அவர்களுக்கு அழகாக்கிக் காட்டி, அவர்களை (நல்) வழியை விட்டும் தடுத்துள்ளான். அவர்கள் நேர் வழி பெற மாட்டார்கள் (என்றும் அந்தப் பறவை கூறிற்று.) **அல்குர்ஆன் (27 : 24)**

இவ்வாறே இணை கற்பிப்போரில் அதிகமானோர் தமது குழந்தைகளைக் கொல்வதை அவர்களின் தெய்வங்கள் அழகாக்கிக் காட்டி, அவர்களை அழித்து, அவர்களது மார்க்கத்தையும் அவர்களுக்குக் குழப்பி விட்டன. அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் இதைச் செய்திருக்க மாட்டார்கள். அவர்கள் இட்டுக் கட்டுவதோடு அவர்களை விட்டு விடுவீராக!

**அல்குர்ஆன் (6 : 137)**

**தீய காரியங்களை செய்யுமாறு ஏவுவான்**

நம்பிக்கை கொண்டோரே! ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள்! யார் ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றுகிறாரோ (அவர் வழி கெடுவார்). ஏனெனில் அவன் வெட்கக்கேடானவற்றையும் தீமையையும் தூண்டுகிறான்.

**அல்குர்ஆன் (24 : 21)**

ஷைத்தான் வறுமையைப் பற்றி உங்களைப் பயமுறுத்துகிறான். வெட்கக் கேடானதை உங்களுக்குத் தூண்டுகிறான். அல்லாஹ்வோ தனது மன்னிப்பையும், அருளையும் வாக்களிக்கிறான். அல்லாஹ் தாராளமானவன்; அறிந்தவன்.

**அல்குர்ஆன் (2 : 268)**

மனிதர்களே! பூமியில் உள்ளவற்றில் அனுமதிக்கப்பட்ட தூய்மையானதை உண்ணுங்கள்! ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள்! அவன் உங்களுக்குப் பகிரங்க எதிரி. அவன் தீமையையும், வெட்கக் கேடானதையும், நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின் மீது இட்டுக்கட்டுவதையும் உங்களுக்குத் தூண்டுகிறான். **அல்குர்ஆன் (2 : 168.169)**

மது, மற்றும் சூதாட்டம் மூலம் உங்களுக்கிடையே பகைமையையும், வெறுப்பையும் ஏற்படுத்தவும், அல்லாஹ்வின் நினைவை விட்டும், தொழுகையை விட்டும் உங்களைத் தடுக்கவுமே ஷைத்தான் விரும்புகிறான். எனவே விலகிக்கொள்ள மாட்டீர்களா?

**அல்குர்ஆன் (5 : 91)**

**தீய எண்ணங்களைத் தோற்றுவிப்பான்**

“அவர்களை வழி கெடுப்பேன்; அவர்களுக்கு(த் தவறான) ஆசை வார்த்தை கூறுவேன்; அவர்களுக்குக் கட்டளையிடுவேன்; அவர்கள் கால்நடைகளின் காதுகளை அறுப்பார்கள். (மீண்டும்) அவர்களுக்குக் கட்டளையிடுவேன்; அல்லாஹ் வடிவமைத்ததை அவர்கள் மாற்றுவார்கள்” (எனவும் கூறினான்). அல்லாஹ்வையன்றி ஷைத்தானைப் பொறுப்பாளனாக்கிக் கொள்பவன் வெளிப்படையான நஷ்டத்தை அடைந்து விட்டான்.

**அல்குர்ஆன் (4 : 119)**

அவர்களுக்கு அவன் வாக்களிக்கிறான். ஆசை வார்த்தை கூறுகிறான். ஷைத்தான் அவர்களுக்கு ஏமாற்றத்தையே வாக்களிக்கிறான்.

**அல்குர்ஆன் (4 : 120)**

அவன் மனிதர்களின் உள்ளங்களில் தீய எண்ணங்களைப் போடுகிறான். ஜின்களிலும், மனிதர்களிலும் இத்தகையோர் உள்ளனர்.

**அல்குர்ஆன் (114 : 4)**

**ஸஃபிய்யா (ரலி) அவர்கள் கூறினார்கள்** : நபி (ஸல்) அவர்கள் ரமளானில் கடைசிப் பத்து நாட்களில் இஃதிகாஃப் இருக்கும்போது அவர்களைச் சந்திக்க நான் செல்வேன். சற்று நேரம் அவர்களுடன் பேசிவிட்டு எழுவேன். அப்போது நபி (ஸல்) அவர்களும் என்னுடன் எழுந்து பள்ளியின் வாசல் வரை வருவார்கள். பள்ளியின் வாசலுக்கு அருகிலிருந்த உம்மு சலமாவின் வாசலை அடைந்தபோது அன்ஸாரிகளில் இருவர் நடந்து சென்றனர். நபி (ஸல்) அவர்களுக்கு சலாம் கூறினர். அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள், “நில்லுங்கள்; இவர் (என் மனைவி) ஸஃபிய்யா பின்த் ‘ஹுயை ஆவார்” எனக் கூறினார்கள். அவ்விருவரும் (ஆச்சரியத்துடன்) ‘சுப்ஹானல்லாஹ்’ (அல்லாஹ் தூயவன்) என்றனர். இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் கூறியது அவ்விருவருக்கும் உறுத்தியது. அப்போது நபி (ஸல்) அவர்கள், “நிச்சயமாக ஷைத்தான்

மனிதனின் ரத்த நாளங்களில் ஊடுருவியிருக்கிறான்; உங்கள் உள்ளங்களில் தவறான எண்ணத்தை அவன் போட்டுவிடுவான் என நான் அஞ்சினேன்” எனக் கூறினார்கள்.

**நூல் : புகாரி (2035)**

**இறைமறுப்பாளர்களாக்க முயற்சிப்பான்**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : உங்களில் ஒருவரிடம் (அவர் மனத்திற்குள்) ஷைத்தான் வந்து, “இதைப் படைத்தவர் யார்? இதைப் படைத்தவர் யார்?” என்று கேட்டுக் கொண்டே வந்து, இறுதியில், “உன் இறைவனைப் படைத்தவர் யார்?” என்று கேட்கின்றான். இந்தக் (கேள்வி கேட்கும்) கட்டத்தை அவன் அடையும்போது அவர் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடட்டும். (இத்தகைய சிந்தனையிலிருந்து) விலகிக்கொள்ளட்டும்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (3276)**

**இறைநினைவை மறக்கடிக்க முயலுவான்**

மது, மற்றும் சூதாட்டம் மூலம் உங்களுக்கிடையே பகைமையையும், வெறுப்பையும் ஏற்படுத்தவும், அல்லாஹ்வின் நினைவை விட்டும், தொழுகையை விட்டும் உங்களைத் தடுக்கவுமே ஷைத்தான் விரும்புகிறான். எனவே விலகிக்கொள்ள மாட்டீர்களா?

**அல்குர்ஆன் (5 : 91)**

ஷைத்தான் அவர்களை மிகைத்து விட்டான். அல்லாஹ்வின் நினைவை அவர்களுக்கு மறக்கச் செய்தான். அவர்களே ஷைத்தானின் கூட்டத்தினர். கவனத்தில் கொள்க! ஷைத்தானின் கூட்டத்தினரே நஷ்டமடைந்தவர்கள்.

**அல்குர்ஆன் (58 : 19)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : தொழுகைக்கு பாங்குசொல்லப்பட்டதும் பாங்கைக் கேட்கக் கூடாது என்பதற்காக ஷைத்தான் காற்று விட்டவனாக ஓடுகிறான். பாங்கு முடிந்ததும் முன்னே வருகிறான். இகாமத் சொல்லப்பட்டதும் திரும்பி ஓடுகிறான். இகாமத் முடிந்ததும் முன்னே வருகிறான். தொழுதுகொண்டிருக்கும் மனிதரிடம் “ நீ இதுவரை நினைத்திராதவற்றையெல்லாம் நினைத்துப் பார்” என்று கூறுவான்.

முடிவில் அம்மனிதர் தாம் எத்தனை ரக்அத்கள் தொழுதோம் என்பதை அறியாதவராகி விடுவார். **அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரி (1222)**

**உறுதியாக இருந்தால் அஞ்சுவான்**

ஷைத்தான் கூறும் ஆசைவார்த்தைகளுக்குக் கட்டுப்படாமல் தீமைகளை வெறுத்து ஒதுக்குவதில் உறுதியாக இருந்தால் ஷைத்தான் நம்மைப் பார்த்து பயப்படுவான். உமர் (ரலி) அவர்கள் இவ்வாறு இருந்ததால் அவர்களைப் பார்த்து ஷைத்தான் அஞ்சியதாக நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

(ஒருமுறை) அல்லாஹ்வின் தூதரிடம் (அவர்களுடைய மனைவிமார்களான) குறைஷிப் பெண்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பெண்கள் நபி (ஸல்) அவர்களிடம் (ஜீவனாம்சத் தொகையை) அதிகமாகத் தரும்படி தம் குரல்களை உயர்த்தி கேட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள் வந்து (உள்ளே வர) அனுமதி கேட்டார்கள். உமர் (ரலி) அவர்கள் அனுமதி கேட்ட போது அப்பெண்கள் அவசர அவசரமாகத் தங்கள் பர்தாக்களை அணிந்தபடி எழுந்து கொண்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரித்தபடியே உமர் (ரலி) அவர்களுக்கு (உள்ளே வர) அனுமதி கொடுத்தார்கள். உமர் (ரலி) அவர்கள், “அல்லாஹ்வின் தூதரே! தங்களை ஆயுள் முழுதும் அல்லாஹ் சிரித்தபடி (மகிழ்ச்சியாக) இருக்கச் செய்வானாக” என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், “என்னிடமிருந்த இந்தப் பெண்களைக் கண்டு நான் வியப்படைகிறேன். (என்னிடம் சகஜமாக அமர்ந்திருந்தவர்கள்) உங்கள் குரலைக் கேட்டவுடன் அவசர அவசரமாகப் பர்தா அணிந்து கொண்டார்களே” என்று சொன்னார்கள். உமர் (ரலி) அவர்கள், “எனக்கு அஞ்சுவதை விட அதிகமாக அஞ்சத் தாங்கள் தாம் தகுதியுடையவர்கள் அல்லாஹ்வின் தூதரே!” என்று கூறிவிட்டு, (அப்பெண் களை நோக்கி) “தமக்குத் தாமே பகைவர்களாகிவிட்ட பெண்களே! அல்லாஹ் வின் தூதருக்கு அஞ்சாமல் எனக்கா நீங்கள் அஞ்சுகிறீர்கள்?” என்று கேட்டார்கள். அதற்கு அந்தப் பெண்கள், “ஆம், அல்லாஹ்வின் தூதருடன் ஒப்பிடும் போது நீங்கள் கடின சித்தமுடையவராகவும் அதிகக் கடுமை காட்டக்கூடியவராகவும் இருக்கின்றீர்கள்” என்று பதிலளித்தார்கள். (அப்போது) அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள், “என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! (உமரே!) நீங்கள் ஒரு பாதையில் சென்றுகொண்டிருக்கையில் உங்களை ஷைத்தான் கண்டால் உங்களுடைய பாதையல்லாத வேறொரு பாதையில்தான் அவன் செல்வான்” என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : சஅத் பின் அபீவக்காஸ் (ரலி)**

**நூல் : புகாரி (3294)**

**தன்னை பின்பற்றியவர்களை ஏமாற்றுவான்**

அறிவுரை எனக்குக் கிடைத்த பின்பும் அதை விட்டு என்னை அவன் (ஷைத்தான்) கெடுத்து விட்டான். ஷைத்தான் மனிதனுக்குத் துரோகம் செய்பவனாகவே இருக்கிறான் (என்றும் கூறுவான்.)

**அல்குர்ஆன் (25 : 29)**

ஷைத்தான் அவர்களின் செயல்களை அவர்களுக்கு அழகானதாகக் காட்டியதை எண்ணிப் பாருங்கள்! "இன்று மனிதர்களில் உங்களை வெல்ல யாருமில்லை; நான் உங்களுக்கு அருகில் இருக்கிறேன்" எனவும் கூறினான். இரு அணிகளும் நேருக்கு நேர் சந்தித்த போது பின் வாங்கினான். "உங்களை விட்டும் நான் விலகிக் கொண்டவன். நீங்கள் பார்க்காததை நான் பார்க்கிறேன். நான் அல்லாஹ்வுக்கு அஞ்சுகிறேன். அல்லாஹ் கடுமையாகத் தண்டிப்பவன்" என்று கூறினான்.

**அல்குர்ஆன் (8 : 48)**

"(ஏக இறைவனை) மறுத்து விடு" என்று மனிதனிடம் கூறி, அவன் மறுத்த பின் "நான் உன்னை விட்டு விலகியவன். அகிலத்தின் இறைவனாகிய அல்லாஹ்வை அஞ்சுகிறேன்" எனக் கூறிய ஷைத்தானைப் போன்றவர்கள்.

**அல்குர்ஆன் (59 : 16)**

"அல்லாஹ் உங்களுக்கு உண்மையான வாக்குறுதி அளித்தான். நானும் உங்களுக்கு வாக்குறுதி அளித்து உங்களிடம் வாக்கு மீறி விட்டேன். உங்களை அழைத்தேன். எனது அழைப்பை ஏற்றீர்கள் என்பதைத் தவிர உங்கள் மீது எனக்கு எந்த அதிகாரமும் இல்லை. எனவே என்னைப் பழிக்காதீர்கள்! உங்களையே பழித்துக் கொள்ளுங்கள்! நான் உங்களைக் காப்பாற்றுபவனும் அல்லன். நீங்கள் என்னைக் காப்பாற்றுவோரும் அல்லர். முன்னர் என்னை (இறைவனுக்கு) இணையாக்கியதை மறுக்கிறேன்" என்று தீர்ப்புக் கூறப்பட்டவுடன் ஷைத்தான் கூறுவான். அநீதி இழைத்தோருக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு

**அல்குர்ஆன் (14 : 22)**

அவர்களுக்கு அவன் வாக்களிக்கிறான். ஆசை வார்த்தை கூறுகிறான். ஷைத்தான் அவர்களுக்கு ஏமாற்றத்தையே வாக்களிக்கிறான். **அல்குர்ஆன் (4 : 120)**

**இறுதியில் நரகம் செல்வான்**

“அல்லாஹ் உங்களுக்கு உண்மையான வாக்குறுதி அளித்தான். நானும் உங்களுக்கு வாக்குறுதி அளித்து உங்களிடம் வாக்கு மீறி விட்டேன். உங்களை அழைத்தேன். எனது அழைப்பை ஏற்றீர்கள் என்பதைத் தவிர உங்கள் மீது எனக்கு எந்த அதிகாரமும் இல்லை. எனவே என்னைப் பழிக்காதீர்கள்! உங்களையே பழித்துக் கொள்ளுங்கள்! நான் உங்களைக் காப்பாற்றுபவனும் அல்லன். நீங்கள் என்னைக் காப்பாற்றுவோரும் அல்லர். முன்னர் என்னை (இறைவனுக்கு) இணையாக்கியதை மறுக்கிறேன்” என்று தீர்ப்புக் கூறப்பட்டவுடன் ஷைத்தான் கூறுவான். அநீதி இழைத்தோருக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு

**அல்குர்ஆன் (14 : 22)**

வழி கெட்டவர்களுக்கு நரகம் வெளிப்படுத்தப்படும். “அல்லாஹ்வையன்றி நீங்கள் வணங்கிக் கொண்டிருந்தவை எங்கே?” அவர்கள் உங்களுக்கு உதவுவார்களா? அல்லது தமக்குத்தாமே உதவிக் கொள்வார்களா? என்று அவர்களிடம் கேட்கப்படும். அவர்களும், வழி கெட்டவர்களும், இப்லீஸின் படையினர் அனைவரும் அதில் முகம் குப்புற தள்ளப்படுவார்கள்.

**அல்குர்ஆன் (26 : 91)**

**காத்துக்கொள்ளும் வழிமுறைகள்**

ஷைத்தான்களிடமிருந்து தங்களை காத்துக்கொள்ள அனைவரும் விரும்புகிறோம். இதற்கான வழிமுறைகள் குர்ஆனும் ஹதீஸ்களும் நமக்கு தெளிவாக கற்றுத்தருகிறது. இவற்றை அறியாத காரணத்தால் இஸ்லாமிய சமூகத்தில் வாழும் பலர் தகடு தாயத்து போன்ற இணைவைப்புக் காரியங்களிலும் சூடமேற்றுதல் திருஷ்டி கழித்தல் முட்டையை உடைத்தல் குர்ஆன் வசனங்களை எழுதி கரைத்து குடித்தல் போன்ற மூடநம்பிக்கைகளிலும் ஈடுபட்டு வருகிறார்கள்.

மாற்று மதத்தினரைப் பார்த்து காப்பியடிக்கப்பட்ட இந்த அநாச்சரங்கள் ஷைத்தானின் செயல்பாடுகளாகும். இவற்றை செய்தால் ஷைத்தானின் வலையில் விழுமுடியுமே தவிர

அவனிடமிருந்து ஒரு போதும் காத்துக்கொள்ள இயலாது. பின்வருகின்ற விஷயங்களை கடைபிடிப்பதன் மூலமே ஷைத்தானிடமிருந்து நம்மை காத்துக்கொள்ள முடியும்.

**சிறந்த பாதுகாவலன்**

ஷைத்தானுடைய சதியிலிருந்து தப்பிப்பதற்கு அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருவதை விட சிறந்த வழி எதுவும் இருக்க முடியாது. ஷைத்தானை படைத்த வல்ல இறைவன் ஷைத்தானின் தீங்குகளிலிருந்து நம்மைக் காக்கும் சிறந்த பாதுகாவலன் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. பின்வரும் வசனங்களை இதையே நமக்கு எடுத்துரைக்கிறது.

அவர்கள் புறக்கணித்தால் அல்லாஹ் உங்களின் பாதுகாவலன் என்பதை அறிந்து கொள்ளுங்கள்! அவன் சிறந்த பாதுகாவலன். சிறந்த உதவியாளன்.

**அல்குர்ஆன் (8 : 40)**

உங்கள் பகைவர்களை அல்லாஹ் நன்கறிவான். அல்லாஹ் பொறுப்பேற்கப் போதுமானவன்; அல்லாஹ் உதவி செய்யப் போதுமானவன்.

**அல்குர்ஆன் (4 : 45)**

“இவ்வேதத்தை அருளிய அல்லாஹ்வே எனது பொறுப்பாளன். அவனே நல்லோருக்குப் பொறுப்பேற்றுக் கொள்கிறான்” (என்றும் கூறுவீராக!)

**அல்குர்ஆன் (7 : 196)**

நம்பிக்கை கொண்டோருக்கு அல்லாஹ் உதவுபவன். இருள்களிலிருந்து வெளிச்சத்திற்கு அவர்களைக் கொண்டு செல்கிறான். (ஏக இறைவனை) மறுப்போருக்கு தீய சக்திகளே உதவியாளர்கள். வெளிச்சத்திலிருந்து இருள்களுக்கு அவர்களைக் கொண்டு செல்கின்றனர். அவர்கள் நரகவாசிகள். அதில் அவர்கள் நிரந்தரமாக இருப்பர்.

**அல்குர்ஆன் (2 : 257)**

**இறைவனிடம் கையேந்துங்கள்**

சகல வல்லமையும் படைத்த இறைவனிடத்தில் கையேந்தி பாதுகாப்புத் தேடுமாறு திருக்குர்ஆ நமக்குக் கற்றுத்தருகிறது. ஷைத்தானிடமிருந்து தப்பிப்பதற்கு அற்புதமான இந்த வழியை விட்டால் வேறு வழி இல்லை.

ஷைத்தானின் தாக்கம் உமக்கு ஏற்பட்டால் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுவீராக! அவன் செவியுறுபவன்; அறிந்தவன். **அல்குர்ஆன் (7 : 200)**

ஷைத்தானிடமிருந்து உமக்கு ஏதும் தீண்டுதல் ஏற்பட்டால் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுவீராக! அவன் செவியுறுபவன்; அறிந்தவன்.

**அல்குர்ஆன் (41 : 36)**

"என் இறைவா! ஷைத்தான்களின் தூண்டுதல்களை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்" என்றும் "என் இறைவா! என்னிடம் அவர்கள் வருவதை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்." என்றும் கூறுவீராக!

**அல்குர்ஆன் (23 : 97)**

(முஹம்மதே!) மனிதர்களின் அரசனும், மனிதர்களின் கடவுளுமான மனிதர்களின் இறைவனிடம் மறைந்து கொண்டு தீய எண்ணங்களைப் போடுபவனின் தீங்கை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று கூறுவீராக!

**அல்குர்ஆன் (114)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இவ்வாறு) பிரார்த்திப்பார்கள். இறைவா உயரமான இடத்திலிருந்து கீழே விழுந்து மரணிப்பதை விட்டும் இடிபாடுகளுக்குள் சிக்கி மரணிப்பதை விட்டும் நீருக்குள் மூழ்கி மரணிப்பதை விட்டும் நெருப்பில் கருகி மரணிப்பதை விட்டும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். மரண வேளையில் ஷைத்தான் என்னை தீண்டுவதை விட்டும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். உன்னுடைய வழியை விட்டு புறக்கணித்தவனாக நான் மரணிப்பதை விட்டும் (விஷ ஜந்துக்களால்) தீண்டப்பட்டு மரணிப்பதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

**அறிவிப்பவர் : அபுல் யசர் (ரலி)**

**நூல் : நஸயீ (5436)**

**குர்ஆனை ஓதும் போது....**

முக்கியமான சில இடங்களில் ஷைத்தானிடமிருந்து பாதுகாப்புத் தேடுமாறு இஸ்லாம் கற்றுத்தருகிறது. இதை தொடர்ந்து கடைபிடித்து வந்தால் ஷைத்தானின் தீங்குகளை விட்டும் நாம் பாதுகாக்கப்படுவோம்.

நீ குர்ஆனை ஓதும் போது விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடிக்கொள்!

**அல்குர்ஆன் (16 : 98)**

**கழிவறைக்குள் நுழையும் போது...**

நபி (ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்குள் நுழைய முற்படும்போது, "இறைவா! (அருவருக்கத் தக்க செயல்கள், இழிவான எண்ணங்கள் ஆகியற்றைத் தூண்டும்) ஆண் பெண் ஷைத்தானி(ன் தீங்கி)லிருந்து உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன்" என்று கூறுவார்கள்.

**அறிவிப்பவர் : அனஸ் (ரலி)**

**நூல் : புகாரி (142)**

**உடலுறவு கொள்ளும் போது...**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : உங்களில் ஒருவர் தன் வீட்டாரிடம் (உடலுறவு கொள்ள) வந்து, "பிஸ்மில்லாஹ் –அல்லாஹ்வின் திருப்பெயரால்– இறைவா! ஷைத்தானை எங்களிடமிருந்து விலகியிருக்கச் செய். எங்களுக்கு நீ அளிக்கும் சந்ததிகளிடமிருந்தும் ஷைத்தானை விலகியிருக்கச் செய்" என்று பிரார்த்தனை புரிந்து, பிறகு அவர்களுக்குச் சந்ததி அளிக்கப்பட்டால் அந்தச் சந்ததிக்கு ஷைத்தான் தீங்கு செய்ய மாட்டான்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (3271)**

**காலையிலும் மாலையிலும்**

அல்லாஹ்வின் தூதரே காலையிலும் மாலையிலும் ஓத வேண்டியதை எனக்குக் கற்றுத்தாருங்கள் என்று அபூபக்ர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு

நபி (ஸல்) அவர்கள் காலையிலும் மாலையிலும் உறங்கச் செல்லும் போது அல்லாஹும்ம ஆலிமல் கைபி வஷ்ஷஹாததி ஃபாதிர ஸ்ஸமாவாதி வல்அர்ளி ரப்பி குல்லி ஷையின் வமலீகஹு அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லா அன்த அவூது மிக மின் ஷர்ரி நஃப்ஸி வமின் ஷர்ரிஷ்ஷைதானி வஷிர்கிஹி என்று சொல்லுங்கள் எனக் கூறினார்கள்.

பொருள் : "அல்லாஹ்வே! வானங்களையும் பூமியையும் படைத்தவனே! மறைவானதையும் வெளிப்படையானதையும் அறிந்தவனே! அனைத்துப் பொருட்களின் இரட்சகனும் அதிபதியுமானவனே உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று நான் சாட்சி கூறுகிறேன். உன்னிடத்தில் என் உள்ளதின் தீங்கை விட்டும் ஷைத்தானின் தீங்கை விட்டும் அவனை இணையாக்குவதை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : திர்மிதி (3314)**

**ஃபஜ்ர் தொழுத பிறகு....**

நபியவர்கள் கற்றுக் கொடுத்த ஏகத்துவ வாக்கியத்தை மொழியும் போது அழிவுகளிலிருந்து முஸ்லிம் காக்கப்படுகிறான். ஆனால் இணை வைப்பு என்ற பாவத்தைச் செய்து விட்டால் இந்த பாதுகாப்பு அகன்று நாசமாகி விடுகிறான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஃபஜ்ர் தொழுகைக்குப் பிறகு இரு கால்களையும் மடக்கியவாறே (வேறு விஷயங்களை) பேசுவதற்கு முன்னால் லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக்க லஹு லஹுல் முல்(க்)கு வலஹுல் ஹம்து யுஹ்யீ வயுமீ(த்)து வஹுவ அலா குல்லி ஷையின் கதீர் என்று பத்து முறை எவர் கூறுகிறாரோ அவருக்குப் பத்து நன்மைகள் எழுதப்படுகின்றன. பத்து பாவங்கள் அவரை விட்டும் அழிக்கப்படுகின்றன. அவருக்காகப் பத்து தகுதிகள் உயர்த்தப்படுகின்றன. அந்த நாள் முழுவதும் அனைத்து ஆபத்துகளிலிருந்தும் பாதுகாக்கப்படுகிறார். ஷைத்தானிடமிருந்தும் பாதுகாக்கப்படுகிறார். அந்நாளில் அல்லாஹ்விற்கு இணை கற்பிப்பதைத் தவிர வேறெந்த பாவத்தாலும் அவரை நாசமாக்க இயலாது.

பொருள் : அல்லாஹ் ஒருவனையன்றி வேறு யாரும் வணக்கத்திற்குத் தகுதியானவர்கள் இல்லை. அவனுக்கு எந்த நிகரும் இல்லை. அதிகாரமும், புகழும் அவனுக்கே உரியது. அவன்

உயிர்பிக்கிறான். மரணிக்கச் செய்கிறான். எல்லாவற்றின் மீதும் அவன் ஆற்றல் உள்ளவனாக இருக்கிறான்.

**அறிவிப்பவர் : அபூதர் (ரலி)**

**நூல் : திர்மிதி (3396)**

**உறங்கச் செல்லும் முன்....**

அல்வலீத் பின் வலீத் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் : அல்லாஹ்வின் தூதரே எனக்கு பயம் ஏற்படுகிறது என்று (நபி (ஸல்) அவர்களிடம்) நான் கூறினேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் நீ உறங்கச் செல்லும் போது அவூது பிகலிமாதில்லாஹித் தாம்மதி மின் கலபிஹி வஇகாபிஹி வஷர்ரி இபாதிஹி வமின் ஹமசாதிஷ்ஷயாதீனி வஅய்யஹ்ளுரூனி என்று கூறு. இவ்வாறு நீ கூறினால் ஷைத்தானால் உனக்கு எந்த தீங்கும் ஏற்படாது. அவனால் உன்னை நெருங்கவே முடியாது.

பொருள் : அல்லாஹ்வின் முழுமையான வார்த்தைகளை கொண்டு அல்லாஹ்வின் கோபத்தை விட்டும் அவனது தண்டனையை விட்டும் அடியார்களின் தீங்கை விட்டும் ஷைத்தான்களின் தூண்டுதல்களை விட்டும் ஷைத்தான்கள் என்னிடம் வருவதை விட்டும் நான் பாதுகாவல் தேடுகிறேன்.

**நூல் : அஹ்மத் (22719)**

**அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்** : ரமளானுடைய ஸகாத் பொருளைப் பாதுகாத்திடும் பொறுப்பை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் ஒப்படைத்தார்கள். அப்போது (இரவில்) ஒருவன் வந்து அந்த (ஸகாத்) உணவுப் பொருளை அள்ளலானான். உடனே, நான் அவனைப் பிடித்துக் கொண்டேன்; “உன்னை அல்லாஹ்வின் தூதரிடம் இழுத்துச் சென்று முறையிடுவேன்” என்று கூறினேன். (அறிவிப்பாளர் முழு நிகழ்ச்சியையும் விபரமாகச் சொல்கிறார்........) இறுதியில் அவன், “நீங்கள் படுக்கைக்குச் செல்லும் போது ஆயத்துல் குர்ஸீயை ஓதுங்கள். (அவ்வாறு ஓதினால்) உங்களுடன் பாதுகாவலர் (வானவர்) ஒருவர் இருந்து கொண்டேயிருப்பார். காலை நேரம் வரும் வரை ஷைத்தான் உங்களை நெருங்க மாட்டான்” என்று என்னிடம் சொன்னான். (இதை நபி (ஸல்) அவர்களிடம் சொன்ன போது,) “அவன் பொய்யனாயிருந்தும், உங்களிடம் உண்மை பேசியுள்ளான். அவன் ஷைத்தான் தான்” என்று கூறினார்கள்.

**நூல் : புகாரி (3275)**

**கெட்ட கனவுகள் ஏற்படும் போது....**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நல்ல (உண்மையான) கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும். கெட்ட (பொய்யான) கனவு ஷைத்தானிடமிருந்து வருவதாகும். ஆகவே, எவரேனும் தாம் விரும்பாத (தீய கனவு) ஒன்றைக் கண்டால் அவர் தமது இடப்பக்கத்தில் மூன்று முறை துப்பட்டும்; ஷைத்தானிடமிருந்து (காக்குமாறு அல்லாஹ்விடம்) அவர் பாதுகாப்புக் கோரட்டும். ஏனெனில், (இப்படிச் செய்தால்) அவருக்கு அது எந்தத் தீங்கும் இழைத்திட இயலாது. மேலும், ஷைத்தான் என் உருவத்தில் காட்சி தரமாட்டான்.

**அறிவிப்பவர் : அபூகத்தத்தா (ரலி)**

**நூல் : புகாரி (6995)**

**ஓரிடத்தில் தங்கும் போது...**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : உங்களில் ஒருவர் (பயணத்தில்) ஓரிடத்தில் இறங்கித் தங்கும்போது. 'அஊது பி கலிமாத்தில் லாஹித் தாம்மாத்தி மின் ஷர்ரி மா கலக' என்று கூறினால். அவர் அங்கிருந்து புறப்பட்டுச் செல்லும்வரை அவருக்கு எதுவும் தீங்கிழைக்காது.

**அறிவிப்பவர் : கவ்லா பின்த் ஹகீம் அஸ்ஸுலமிய்யா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (5248)**

**பள்ளிக்குள் நுழையும் போது**

நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசலிற்குள் நுழைந்தால் அவூதுபில்லாஹில் அளீம் வபிவஜ்ஹிஹில் கரீம் வசுல்தானிஹில் கதீம் மினஷ்ஷைதானிர் ரஜீம் என்று கூறுவார்கள்.

பொருள் : அல்லாஹ்வின் சங்கைக்குரிய முகத்தின் பொருட்டாலும் அவனது நிரந்தரமான அதிகாரத்தின் பொருட்டாலும் எடுத்தெரியப்பட்ட ஷைத்தானிடமிருந்து மகத்துவமிக்க அல்லாஹ்விடத்தில் நான் பாதுகாவல் தேடுகிறேன்.

**அறிவிப்பவர் : அம்ர் பின் ஆஸ் (ரலி)**

**நூல் : அபூதாவுத் (394)**

**பள்ளியிலிருந்து வெளியேறும் போது....**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : உங்களில் ஒருவர் பள்ளிக்குள் நுழைந்தால் (உங்கள்) நபிக்காக சலாத்தை வேண்டிய பிறகு அல்லாஹும்ம ஃப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக (இறைவா எனக்காக உனது அருள் வாயில்களை திறந்துவிடு) என்று கூறட்டும். அவர் வெளியே செல்லும் போது (உங்கள்) நபிக்காக சலாத்தை வேண்டிய பிறகு அல்லாஹும்ம ஃஸிம்னீ மினஷ்ஷைதானிர் ரஜீம் (இறைவா எடுத்தெறியப்பட்ட ஷைத்தானிடமிருந்து என்னை காப்பாயாக) என்று கூறட்டும்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : இப்னு மாஜா (765)**

**தொழுகையில் குழப்பம் ஏற்பட்டால்....**

உஸ்மான் பின் அபில்ஆஸ் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, “அல்லாஹ்வின் தூதரே! (நான் தொழுது கொண்டிருக்கும்போது) எனக்கும் எனது தொழுகைக்கும் எனது ஓதலுக்குமிடையே ஷைத்தான் தடையாய் நின்று எனக்குக் குழப்பத்தை ஏற்படுத்துகிறான்” என்று கூறினார்கள்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “அவன்தான் ‘கின்ஸப்’ எனப்படும் ஷைத்தான் ஆவான். அவனை நீங்கள் உணர்ந்தால் அவனிடமிருந்து காக்குமாறு அல்லாஹ்விடம் கோரி, உங்கள் இடப் பக்கத்தில் மூன்று முறை துப்பிவிடுங்கள்” என்று கூறினார்கள். அவ்வாறே நான் செய்தபோது, என்னிடமிருந்து அவனை அல்லாஹ் அப்புறப்படுத்திவிட்டான்.

**அறிவிப்பவர் : அபுல்அலாஉ அல்ஆமிரீ (ரஹ்)**

**நூல் : முஸ்லிம் (4431)**

**கோபம் ஏற்பட்டால்....**

நான் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்து கொண்டிருந்தேன். அப்போது இரண்டு மனிதர்கள் ஒருவரையொருவர் திட்டிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவரின் முகம் (கோபத்தால்) சிவந்து விட்டது. அவருடைய தொண்டை நரம்பு புடைத்துக் கொண்டது. உடனே, நபி (ஸல்) அவர்கள், “எனக்கு ஒரு (பிரார்த்தனை) வார்த்தை தெரியும். அதை இவர்

சொல்வாராயின் இவருக்கு ஏற்பட்டுள்ள கோபம் போய் விடும், 'ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்' என்று இவர் பிரார்த்தித்தால் இவருக்கு ஏற்பட்டுள்ள கோபம் போய்விடும்" என்று கூறினார்கள். ஆகவே, மக்கள் அந்த மனிதரிடம், "நபி (ஸல்) அவர்கள், 'ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரு' என்று கூறினார்கள்" எனத் தெரிவித்தார்கள் அதற்கு அவர், "எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா?" என்று கேட்டார்.

**அறிவிப்பவர் : சுலைமான் பின் சுரத் (ரலி)**

**நூல் : புகாரி (3282)**

### கழுதையின் சப்தத்தை கேட்டால்..

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நீங்கள் சேவல்கள் கூவுகின்ற சத்தத்தைக் கேட்டால் அல்லாஹ்விடம் அவனது அருளைக் கேளுங்கள்: ஏனெனில், அவை வானவரைப் பார்த்திருக்கின்றன. (அதனால் தான் கூவுகின்றன.) கழுதை கத்தும் சத்தத்தை நீங்கள் கேட்டால் ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள். ஏனெனில், அது ஷைத்தானைப் பார்த்திருக்கின்றது. (அதனால் தான் கத்துகின்றது.)

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (3303)**

### குழந்தைக்காகப் பாதுகாப்புத் தேட வேண்டும்

ஷைத்தானிடமிருந்து நமது குழந்தைகளை பாதுகாக்குமாறு அல்லாஹ்விடம் வேண்டினால் அல்லாஹ் குழந்தைகளை பாதுகாப்பான்.

அவர் ஈன்றெடுத்த போது, "என் இறைவா! பெண் குழந்தையாக ஈன்றெடுத்து விட்டேனே" எனக் கூறினார். அவர் எதை ஈன்றெடுத்தார் என்பதை அல்லாஹ் நன்கறிவான். "ஆண், பெண்ணைப் போன்றவன் அல்ல. நான் இவளுக்கு மர்யம் என்று பெயரிட்டேன். விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் இவருக்கும், இவரது வழித் தோன்றல்களுக்கும் உன் பாதுகாப்பை வேண்டுகிறேன்" எனவும் அவர் கூறினார். **அல்குர்ஆன் (3 : 36)**

" 'ஆதமின் மக்களில் (புதிதாகப்) பிறக்கும் குழந்தை எதுவாயினும் அது பிறக்கும் போதே ஷைத்தான் அதைத் தீண்டுகிறான். ஷைத்தானின் தீண்டலால் அக்குழந்தை கூக்குரலெழுப்பும்.

மர்யமையும் அவருடைய மகனையும் தவிர' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்" என அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்து விட்டு பிறகு, " நான் இக் குழந்தைக்காகவும் வருங்கால வழித்தோன்றலுக்காகவும் சபிக்கப்பட்ட ஷைத்தானை விட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்" என்னும் (மர்யமுடைய தாய் செய்த பிரார்த்தனையை கூறும்-என்ற 3:36-வது இறைவசனத்தை ஓதுவார்கள்.

**அறிவிப்பவர் : சயீத் பின் முஸய்யப் (ரலி)**

**நூல் : புகாரி (3431)**

நமது பிள்ளைகளுக்காக நாமே குர்ஆன் சூராக்களையும் நபி (ஸல்) அவர்கள் கற்றுக்கொடுத்த துஆக்களையும் வைத்து ஓதிப்பார்க்கலாம்.

நபி (ஸல்) அவர்கள், ஹஸன் (ரலி) மற்றும் ஹுஸைன் (ரலி) ஆகியோருக்காக (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோரி வந்தார்கள். "அல்லாஹ்வின் முழுமையான (குணமளிக்கும்) சொற்களைக் கொண்டு ஒவ்வொரு ஷைத்தானிடமிருந்தும் நச்சுப் பிராணியிடமிருந்தும் தீய எண்ணத்துடன் தீண்டும் (பொறாமைக்) கண்ணிலிருந்தும் அவனிடம் பாதுகாப்புக் கோருகின்றேன்" எனும் இந்தச் சொற்களின் மூலம் உங்கள் இருவரின் தந்தை(யான இப்ராஹீம் (அலை) அவர்கள் தம் மகன்களான) இஸ்மாயீல் (அலை) மற்றும் இஸ்ஹாக் (அலை) ஆகியோருக்காகப் பாதுகாப்புக் கோரி வந்தார்கள்-என்று கூறுவார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (3371)**

## தகடு தாயத்துகளைத் தொங்கவிடுவது இணை வைப்பாகும்

குர்ஆன் வசனங்கள் எழுதப்பட்ட தாளை மடித்து தாவீஸாகத் தயாரித்து கழுத்திலும், கையிலும், இடுப்பிலும் பலர் மாட்டிக் கொள்கிறார்கள். குறிப்பிட்ட சில வார்த்தைகளைச் செம்புத் தகட்டில் எழுதி கடைகளில் தொங்க விடுகிறார்கள்.

என்னைப் பார் யோகம் வரும் என்று எழுதப்பட்ட கழுதையின் படத்தை கடைகளில் தொங்க விட்டிருக்கிறார்கள். இன்னும் சிலர் தட்டில் எதையோ எழுதி கரைத்துக் குடிக்கிறார்கள்.

அல்லாஹ்வின் மீது வைக்க வேண்டிய நம்பிக்கையை கையிற்றின் மீதும் செம்புத் தட்டின் மீதும் தாளின் மீதும் வைத்து விடுவதால் இது இணை வைப்பாகும். நபி (ஸல்) அவர்கள் இதை தடை செய்துள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடத்தில் (பைஅத் செய்வதற்காக பத்து பேர் கொண்ட) சிறு கூட்டம் ஒன்று வந்தது. அவர்களில் ஒன்பது நபர்களிடம் நபி (ஸல்) அவர்கள் உறுதிமொழி வாங்கினார்கள். ஒருவரிடம் உறுதிமொழி வாங்கவில்லை. மக்கள் அல்லாஹ்வின் தூதரே ஒன்பது பேர்களிடத்தில் உறுதிமொழி வாங்கினீர்கள். இவரை விட்டு விட்டீர்களே என்று கேட்டார்கள். அதற்கு நபியவர்கள் அவர் மீது தாயத்து உள்ளது என்று கூறினார்கள். அப்போது அந்த மனிதர் தன் கையை உள்ளே விட்டு அந்த தாயத்தைக் கழற்றினார். அவரிடத்தில் நபியவர்கள் பைஅத் செய்த பிறகு யார் தாயத்தைத் தொங்க விடுகிறானோ அவன் இணை வைத்து விட்டான் என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : உக்பா பின் ஆமிர் (ரலி)**

**நூல் : அஹ்மத் (16781)**

நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதரின் கை புஜத்தில் மஞ்சல் நிற உலோகத்தால் ஆன வளயத்தைக் கண்டார்கள். உனக்கு என்ன ஆனது? இது வென்ன? என்று நபி (ஸல்) அவர்கள் (அவரிடம்) கேட்டார்கள். அதற்கு அவர் கை புஜத்தில் ஏற்பட்ட நோயின் காரணமாக (இதை அணிந்துள்ளேன்) என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் (அவரிடம்) அறிந்து கொள். இது உனக்கு சிரமத்தைத் தவிர வேறெதையும் அதிகப்படுத்தாது. உன்னை விட்டு இது எரிந்துவிடு. இது உன்மீது இருக்கும் நிலையில் நீ மரணித்து விட்டால் ஒரு போதும் நீ வெற்றியடைய முடியாது என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இம்ரான் பின் ஹுசைன் (ரலி)**

**நூல் : அஹ்மத் (19149)**

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய பிரயாணம் ஒன்றில் அவர்களுடன் இருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தூதுவர் ஒருவரை

அனுப்பி,‘‘எந்த ஒட்டகத்தின் கழுத்திலும் (ஒட்டக வாரினால் ஆன, கண் திருஷ்டி கழிவதற்காகக் கட்டப்படுகின்ற) கயிற்று மாலையோ அல்லது (காற்று, கருப்பு விரட்டுவதற்காகக் கட்டப்படுகின்ற) வேறெந்த மாலையோ இருக்கக் கூடாது. அப்படியிருந்தால் கட்டாயம் அதைத் துண்டித்து விட வேண்டும்’’ என்று (பொது மக்களிடையே) அறிவிக்கச் செய்தார்கள்.

**அறிவிப்பவர் : அபூ பஷீர் அல் அன்சாரீ (ரலி)**

**நூல் : புகாரி (3005)**

**மார்க்கம் கற்றுத்தராத முறையில் ஓதிப்பார்க்கக் கூடாது**

ஓதிப் பார்ப்பதற்கு நபி (ஸல்) அவர்களிடம் சிலர் அனுமதி கேட்ட போது ஓதிப் பார்க்கும் முறையைத் தன்னிடம் கூறுமாறு நபியவர்கள் கூறினார்கள். அதில் குறை ஏதும் இல்லை என்று அவர்கள் அங்கீகாரம் அளித்த பிறகே ஓதிப் பார்ப்பதற்கு அனுமதியளித்தார்கள்.

எனவே நம் இஷ்டத்திற்கு ஆதாரமில்லாம் மனதில் தோன்றியவாரெல்லாம் ஓதிப்பார்க்கக் கூடாது. எப்படி ஓதிப்பார்க்க வேண்டும் என்று மார்க்கம் கற்றுத் தந்துள்ளது. அந்த அடிப்படையில் ஓதிப் பார்க்க வேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓதிப்பார்க்க வேண்டாமெனத் தடை விதித்தார்கள். அப்போது அம்ர் பின் ஹஸ்ம் குடும்பத்தார் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, ‘‘அல்லாஹ்வின் தூதரே! தேள் கடிக்காக ஓதிப் பார்க்கும் வழக்கம் எங்களிடம் இருந்தது. (ஆனால்,) தாங்களோ ஓதிப் பார்க்க வேண்டாமெனத் தடை விதித்து விட்டீர்கள்!’’ என்று கூறினார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அ(வர்கள் ஓதிப்பார்த்து வ)ந்த வாசகத்தைக் கூறுமாறு கேட்டார்கள். அவர்கள் அ(ந்த வாசகத்)தைக் கூறியபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ‘‘நான் (இதில்) குறையெதையும் காணவில்லை. உங்களில் ஒருவரால் தம் சகோதரருக்குப் பயனளிக்க முடியுமானால் அவ்வாறே பயனளிக்கட்டும்!’’ என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி) நூல் : முஸ்லிம் (4226)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : (தவறான முறையில்) ஓதிப் பார்க்கிறவர் அல்லது சூடுபோட்டுக் கொள்பவர் (அல்லாஹ்வின் மீது) நம்பிக்கை வைப்பதை விட்டும் விலகி விட்டார்.

**அறிவிப்பவர் : முஃகீரா பின் ஷுஃபா (ரலி)**

**நூல் : திர்மிதி (1980)**

**சூரத்துல் பாத்திஹாவை வைத்து ஓதிப் பார்க்கலாம்.**

நபி (ஸல்) அவர்களுடைய தோழர்களில் சிலர் (ஒரு பயணத்தின் போது) ஓர் அரபுக் குலத்தாரிடம் சென்றார்கள். அவர்களுக்கு அக்குலத்தார் விருந்தளிக்க முன்வரவில்லை. இந்நிலையில் அக்குலத்தாரின் தலைவனுக்குத் தேள் கொட்டி விட்டது. அப்போது அக்குலத்தார் (நபித்தோழர்களிடம் வந்து) ''உங்களிடம் (இதற்கு) மருந்து ஏதும் உள்ளதா? அல்லது ஓதிப் பார்ப்பவர் எவரும் இருக்கிறாரா?'' என்று கேட்டனர். அதற்கு நபித்தோழர்கள், ''நீங்கள் எங்களுக்கு விருந்தளிக்க முன்வரவில்லை. ஆகவே, நீங்கள் எங்களுக்கு (ஒரு) குறிப்பிட்ட கூலியைத் தந்தாலே தவிர (வெறுமனே) உங்களுக்கு நாங்கள் ஓதிப் பார்க்க மாட்டோம்'' என்று கூறினர்.

உடனே, நபித் தோழர்களுக்காக அக்குலத்தார் (முப்பது ஆடுகள் கொண்ட) ஓர் ஆட்டு மந்தையைக் கூலியாக நிர்ணயித்தார்கள். நபித் தோழர்களில் ஒருவர் (எழுந்து சென்று) 'குர்ஆனின் அன்னை' எனப்படும் 'அல்ஃபாத்திஹா' அத்தியாயத்தை ஓதித் தமது எச்சிலைக் கூட்டி (கடிபட்ட இடத்தில்) உமிழ்ந்தார். உடனே அவர் வலி நீங்கி குணமடைந்தார். (பேசியபடி) அவர்கள் ஆடுகளைக் கொண்டு வந்(து கொடுத்)தனர். நபித்தோழர்கள், ''நபி (ஸல்) அவர்களிடம் (அனுமதி) கேட்காத வரை இதை நாம் எடுத்துக் கொள்ளக் கூடாது'' என்று (தமக்குள்) பேசிக்கொண்டு அவ்வாறே நபி (ஸல்) அவர்களிடம் (வந்து அனுமதி) கேட்டனர். நபி (ஸல்) அவர்கள் சிரித்துவிட்டு 'அல் ஃபாத்திஹா' அத்தியாயம் ஓதிப் பார்க்கத் தகுந்தது என்று உமக்கு எப்படித்தெரியும்? அந்த ஆடுகளை எடுத்துக் கொள்ளுங்கள்; எனக்கும் அதில் ஒரு பங்கு கொடுங்கள்'' என்று சொன்னார்கள். **அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி) நூல் : புகாரி (5736)**

## 112, 113, 114 ஆகிய அத்தியாயங்களை ஓதி ஊதலாம்

நபி (ஸல்) அவர்கள் தமது படுக்கைக்கு (உறங்கச்) சென்றால் ஒவ்வோர் இரவிலும் தமது உள்ளங்கைகளை இணைத்து, அதில் 'குல் ஹுவல்லாஹு அஹத்', 'குல் அஊது பிரப்பில் ஃபலக்', 'குல் அஊது பிரப்பின்னாஸ்' ஆகிய (112, 113, 114) அத்தியாயங்களை ஓதி ஊதிக் கொள்வார்கள். பிறகு தம் இரு கைகளால் (அவை எட்டும் அளவிற்கு) தமது உடலில் இயன்ற வரையில் தடவிக் கொள்வார்கள். முதலில் தலையில் ஆரம்பித்து, பிறகு முகம், பிறகு தம் உடலின் முற்பகுதியில் கைகளால் தடவிக் கொள்வார்கள். இவ்வாறு மூன்று முறை செய்வார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (5017)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டு விட்டால் பாதுகாப்புக் கோரும் வசனங்களை(க் கொண்ட குர்ஆனின் கடைசி மூன்று அத்தியாயங்களை) ஓதித் தம் மீது ஊதி, தமது கையை (தம் உடல் மீது) தடவிக் கொள்வார்கள். நபி (ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்து போனார்களோ அந்த நோயின் போது, அவர்கள் (ஓதி) ஊதிக் கொள்ளும் பாதுகாப்பு வசனங்களை நான் அவர்கள் மீது (ஓதி) ஊதலானேன். அதை நபி (ஸல்) அவர்களின் (கையில் ஊதி அந்தக்) கையாலேயே அவர்களின் (உடல்) மீது தடவலானேன்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (4439)**

## நபியவர்கள் கற்றுக்கொடுத்த பிரார்த்தனைகளை கொண்டு...

நோயாளி குணமாவதற்காக செய்ய வேண்டிய பிரார்த்தனையை நபி (ஸல்) அவர்கள் கற்றுத் தந்துள்ளார்கள். குழந்தைகள் நோயுறும் போது அவற்றை நாம் ஓதிக் கொள்ள வேண்டும்.

நானும் ஸாபித் பின் அஸ்லம் அல்புனானீ (ரஹ்) அவர்களும் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் சென்றோம். ஸாபித் (ரஹ்) அவர்கள் ''அபூஹம்ஸாவே! நான் நோய் வாய்ப்பட்டுள்ளேன்'' என்று சொல்ல, அனஸ் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எதனால் ஓதிப் பார்த்தார்களோ அதனால் உங்களுக்கும் நான் ஓதிப் பார்க்கட்டுமா?'' என்று கேட்டார்கள். ஸாபித் (ரஹ்), ''சரி (அவ்வாறே ஓதிப் பாருங்கள்)'' என்று சொல்ல, அனஸ் (ரலி) அவர்கள், ''அல்லாஹும்ம ரப்பன்னாஸ்! முத்ஹிபல் பஃஸி, இஷ்ஃபி அன்த்தஷ் ஷாஃபீ, லா ஷாஃபிய இல்லா அன்த்த, ஷிஃபாஅன் லா யுஃகாதிரு சகமன்' என்று கூறி ஓதிப் பார்த்தார்கள்.

(பொருள்: இறைவா! மக்களை இரட்சிப்பவனே! துன்பத்தைப் போக்குபவனே! குணமளிப்பாயாக! நீயே குணமளிப்பவன். உன்னைத் தவிர குணமளிப்பவர் வேறு எவருமில்லை. அறவே நோய் இல்லாதவாறு குணமளிப்பாயாக.)

**அறிவிப்பவர் : அப்துல் அஸீஸ் பின் ஸுஹைப் (ரஹ்)**

**நூல் : புகாரி (5742)**

உஸ்மான் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து (அல்லாஹ்வின் தூதரே) என்னை அழிக்கின்ற அளவிற்கு எனக்கு வலி ஏற்பட்டுள்ளது என்று கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (வலி ஏற்பட்ட இடத்தில்) ஏழு முறை தடவி அவூது பிஇஸ்ஸதில்லாஹி வகுத்ரதிஹீ மின் ஷர்ரீ மா அஜிது என்று கூறு என்று சொன்னார்கள்.

பொருள் : அல்லாஹ்வின் கண்ணியத்தின் பொருட்டாலும் அவனது ஆற்றலின் பொருட்டாலும் நான் அடைந்த தீங்கிலிருந்து (அவனிடம்) பாதுகாப்புத் தேடுகிறேன்.

நான் இவ்வாறு கூறினேன். எனக்கிருந்த வலியை அல்லாஹ் போக்கினான். எனது குடும்பத்தார்களுக்கும் மற்றவர்களுக்கும் இவ்வாறு செய்யுமாறு நான் ஏவிக் கொண்டே இருக்கிறேன்.

**அறிவிப்பவர் : உஸ்மான் பின் அபில் ஆஸ் (ரலி)**

**நூல் : மாலிக் (1479)**

### குழந்தைகளை வெளியில் விடக்கூடாத நேரம்

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : “இரவின் இருள் படரத் தொடங்கி விட்டால் உங்கள் குழந்தைகளை (வெளியே திரிய விடாமல்) தடுத்து விடுங்கள். ஏனெனில், ஷைத்தான்கள் அப்போதுதான் (பூமியெங்கும்) பரவி விடுகின்றன. இரவு வேளையில் சிறிது நேரம் கழிந்து விட்டால் அவர்களை (வெளியே செல்ல) விட்டு விடுங்கள்.

**அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)**

**நூல் : புகாரி (3280)**

### இறைவனை அதிகம் நினைக்க வேண்டும்

இறைவனை மறந்தவரிடம் ஷைத்தான் நன்கு விளையாடுவான். இறைநினைவு உள்ளவரிடம் ஷைத்தான் நெருங்மாட்டான். எனவே இறைவனை அதிகமாக நினைவுகூற வேண்டும்.

எவர் அளவற்ற அருளாளனின் அறிவுரையைப் புறக்கணிக்கிறாரோ அவருக்கு ஒரு ஷைத்தானைச் சாட்டுவோம். அவன் அவருக்குத் தோழனாவான்.

**அல்குர்ஆன் (43 : 36)**

நம்பிக்கை கொண்டோரின் உள்ளங்கள் அல்லாஹ்வின் நினைவால் அமைதியுறுகின்றன. கவனத்தில் கொள்க! அல்லாஹ்வின் நினைவால் தான் உள்ளங்கள் அமைதியுறுகின்றன.

**அல்குர்ஆன் (13 : 28)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நீங்கள் அல்லாஹ்வை நினைவுகூற வேண்டும் என்று உங்களுக்கு வலியுறுத்திக் கூறிக்கொள்கிறேன். எதிரி ஒருவரை பின்தொடர்ந்து விரட்டிச் செல்கிறான். அவர் பாதுகாப்பான கோட்டைக்குள் நுழைந்து தன்னை எதிரிகளிடமிருந்து காத்துக்கொள்கிறார். அல்லாஹ்வை நினைப்பதற்கு உதாரணம் இதுவாகும். அடியான் அல்லாஹ்வை நினைப்பதின் மூலமே தன்னை ஷைத்தானிடமிருந்து காத்துக்கொள்ள முடியும் என்று யஹ்யா (அலை) அவர்கள் இஸ்ரவேலர்களுக்குக் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஹாரிஸ் அல்அஷ்அரீ (ரலி)**

**நூல் : அஹ்மத் (2790)**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒருவர் தமது இல்லத்திற்குள் நுழையும் போதும் உணவு உண்ணும்போதும் அல்லாஹ்வை நினைவுகூர்ந்தால், ஷைத்தான் (தன் கூட்டத்தாரிடம்), "இன்றைய இரவில் உங்களுக்கு (இங்கே) தங்குமிடமும் இல்லை; உண்ண உணவுமில்லை" என்று கூறுகிறான். ஒருவர் இல்லத்திற்குள் நுழையும் போது அல்லாஹ்வை நினைவுகூராவிட்டால் ஷைத்தான் (தன் கூட்டத்தாரிடம்), "இன்றைய இரவில் உங்களுக்குத் தங்குமிடம் கிடைத்துவிட்டது" என்று சொல்கிறான்.

அவர் உணவு உண்ணும்போது அல்லாஹ்வின் பெயர்கூறாவிட்டால் ஷைத்தான் "இன்றைய இரவில் நீங்கள் தங்கும் இடத்தையும் உணவையும் அடைந்துகொண்டீர்கள்" என்று சொல்கிறான்.

**அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (4106)**

## இறைத்தூதர் கற்றுத்தந்தவாறு நினைக்க வேண்டும்

இன்றைக்கு திக்ர் என்ற பெயரில் பல்வேறு அநாச்சாரங்கள் அறங்கேற்றப்பட்டுக்கொண்டிருக்கிறது. இருட்டறையில் கும்பலாக பள்ளிவாசல் அதிரும் அளவிற்கு கத்துகிறார்கள். அல்லாஹ் என்று கூறாமல் ஆஹ் என்றும் ஹூ அல்லாஹ் ஹூ ஹூ அல்லாஹ் என்றும் அர்த்தமில்லாத வார்த்தைகளை கூறி இறைதியானத்தை கொச்சைப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள்.

இவையெல்லாம் ஷைத்தானுடைய செயல்களாகும். இவ்வாறு செய்தால் ஷைத்தானின் வலையில் விழலாமே தவிர ஷைத்தானிடமிருந்து பாதுகாப்பு பெய இயலாது. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கற்றுத்தந்த வார்த்தைகளை கூறுவதன் மூலம் அவனிடமிருந்து பாதுகாப்பு பெற முடியும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாரும் இல்லை. அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது. அவனுக்கே புகழ் அனைத்தும் உரியது. அவன் எல்லாவற்றிற்கும் வலிமையுடையவன் - லா இலாஹ இல்லல் லாஹ், வஹ்தஹு லாஷரீக்க லஹு, லஹுல் முல்க்கு வ லஹுல் ஹம்து, வ ஹுவ அலா குல்லி ஷய்இன் கதீர் - என்று எவர் ஒரு நாளில் நூறு முறை சொல்கிறாரோ அவருக்கு, அது பத்து அடிமைகளை விடுதலை

செய்வதற்குச் சமமா(க நற்பலன் பெற்றுக் கொடுப்பதா)கும். மேலும், அவருக்கு நூறு நன்மைகள் எழுதப்படும். அவரது கணக்கிலிருந்து (அவர் புரிந்த) நூறு தீமைகள் அழிக்கப்படும். மேலும், அவருடைய அந்த நாளில் மாலை நேரம் வரும் வரை ஷைத்தானிடமிருந்து (பாதுகாக்கும்) அரணாக அது அவருக்கிருக்கும். மேலும், அவர் புரிந்த சிறந்த நற்செயலை எவரும் செய்ய முடியாது; ஒருவர் இதை விட அதிகமான (தடவைகள் இதை ஓதினால் அல்லது மிக முக்கியமான) ஒரு நற்செயல் புரிந்தாலே தவிர.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (3293)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஃபாத்திமா (ரலி) அவர்களிடம் கூறினார்கள் : லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக்க லஹு என்று காலையில் நீ கூறினால் மாலையில் மறுபடியும் நீ இதை கூறும் வரை ஒவ்வொரு ஷைத்தானிடமிருந்தும் எல்லா தீமையிலிருந்தும் உனக்குப் பாதுகாப்பாக அமையும்.

பொருள் : அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு நிகராக யாருமில்லை.

**அறிவிப்பவர் : உம்மு சலமா (ரலி)**

**நூல் : அஹ்மத் (25340)**

**நற்குணங்களை வளர்த்துக்கொள்ள வேண்டும்**

இறைநம்பிக்கை இறையச்சம் மனத்தூய்மை போன்ற நற்குணங்களை வளர்த்துக்கொண்டால் ஷைத்தான் நம்மை வழிகெடுக்க முடியாது.

எனது அடியார்களில் உன்னைப் பின்பற்றிய வழிகேடர்களைத் தவிர மற்றவர்கள் மீது உனக்கு எந்த அதிகாரமும் இல்லை.

**அல்குர்ஆன் (15 : 42)**

நம்பிக்கை கொண்டோர் மீதும், தமது இறைவனையே சார்ந்திருப்போர் மீதும் அவனுக்கு (ஷைத்தானிற்கு) அதிகாரம் இல்லை.

**அல்குர்ஆன் (16 : 99)**

(இறைவனை) அஞ்சுவோருக்கு ஷைத்தானின் தாக்கம் ஏற்பட்டால் உடனே சுதாரித்துக் கொள்வார்கள்! அப்போது அவர்கள் விழித்துக் கொள்வார்கள்.

**அல்குர்ஆன் (7 : 201)**

## ஃபஜ்ர் தொழுக வேண்டும்

ஃபஜ்ர் தொழுகை நமக்கு உற்சாகத்தையும் சுறுசுறுப்பையும் ஏற்படுத்துகிறது. ஃபஜ்ர் தொழுகாவிட்டால் ஷைத்தானின் வலையில் மனிதன் விழுந்துவிடுகிறான். ஷைத்தான் அவனுக்கு சோம்பலையும் குழப்பத்தையும் ஏற்படுத்துகிறான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : உங்களில் ஒருவர் உறங்கும்போது உங்கள் தலையின் பின்பக்கத்தில் ஷைத்தான் மூனு முடிச்சுகளைப் போட்டுவிடுகிறான். ஒவ்வொரு முடிச்சின்போதும் 'இன்னும் உனக்கு நீண்ட இரவு (ஓய்வெடுக்க எஞ்சி) இருக்கிறது. ஆகவே, நீ உறங்கு' என்று கூறி (உங்களை விழிக்கவிடாமல் உறங்க வைத்து)விடுகிறான். நீங்கள் (அவனது கூற்றை ஏற்காமல்) கண்விழித்து அல்லாஹ்வை நினைவு கூர்ந்தால் ஒரு முடிச்சு அவிழ்ந்து விடுகிறது. நீங்கள் அங்கசுத்தி (உளூ) செய்தால் மற்றொரு முடிச்சு அவிழ்ந்துவிடுகிறது. நீங்கள் தொழுது விட்டால் முடிச்சுகள் முழுவதும் அவிழ்ந்துவிடுகிறது. நீங்கள் சுறுசுறுப்புடனும் உற்சாகத்துடனும் காலைப் பொழுதை அடைவீர்கள். இல்லையெனில் மனக்குழப்பத்துடனும், சோம்பலுடனும் காலைப் பொழுதை அடைவீர்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (1142)**

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் பொழுது விடியும் வரை (தொழுகைக்கு எழாமல்) உறங்கிக் கொண்டேயிருப்பது பற்றிக் கூறப்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள், "அவரது காதில் ஷைத்தான் சிறுநீர் கழித்துவிட்டான்" என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி)**

**நூல் : புகாரி (1144)**

## குர்ஆன் ஓத வேண்டும்

வீடுகளில் நற்காரியங்களை அதிகமாக செய்வதன் மூலம் ஷைத்தானை விரட்டலாம். இது தான் ஷைத்தானை விரட்டுவதற்கான வழியாகும். இதை அறியாத பலர் பல்வேறு விதமான மூடநம்பிக்கைகளிலும் இணைவைப்புக்காரியங்களிலும் ஈடுபடுகிறார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : உங்கள் இல்லங்களை (தொழுகை, ஓதல் நடைபெறாத) சவக் குழிகளாக ஆக்கிவிடாதீர்கள். 'அல்பகரா' எனும் (இரண்டாவது) அத்தியாயம் ஓதப்படும் இல்லத்திருந்து ஷைத்தான் வெருண்டோடிவிடுகிறான்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (1430)**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : 'அல்பகரா' எனும் (2ஆவது) அத்தியாயத்தின் இறுதி இரு வசனங்களை (285, 286) எவர் இரவில் ஓதுகின்றாரோ அவருக்கு அந்த இரண்டுமே போதும்!

**அறிவிப்பவர் : அபூ மஸ்ஊத் (ரலி)**

**நூல் : புகாரி (5040)**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : வானங்கள் மற்றும் பூமியை படைப்பதற்கு இரண்டாயிரம் வருடத்திற்கு முன்பு அல்லாஹ் ஒரு புத்தகத்தை எழுதினான். அதிலிருந்து இரு வசனங்களை சூரா அல்பகராவின் இறுதியில் அல்லாஹ் அருளியுள்ளான். மூன்று இரவுகள் ஒரு வீட்டில் அவை ஓதப்பட்டால் அவ்வீட்டை ஷைத்தானால் நெருங்க முடியாது.

**அறிவிப்பவர் : நுஃமான் பின் பஷீர் (ரலி)**

**நூல் : திர்மிதி (2807)**

## சஜ்தாவை அதிகப்படுத்த வேண்டும்

சஜ்தா செய்யாத காரணத்தால் தான் ஷைத்தான் வழிகெட்டான். அந்த சஜ்தாவை இறைவனுக்கு நாம் அதிகமாக செய்தால் ஷைத்தான் அழ ஆரம்பிக்கிறான். நம்மை விட்டு விலகிச் செல்கிறான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஆதமின் மைந்தன் (-மனிதன்) சஜ்தா (சிரவணக்கத்திற்கான) வசனத்தை ஓதி சிரவணக்கம் (சஜ்தா) செய்தால் ஷைத்தான் அழுதவாறே “அந்தோ எனக்கு வந்த நாசமே! ஆதமின் மைந்தன் சிரவணக்கம் செய்யும்படி கட்டளையிடப்பட்டான். அவன் சிரவணக்கம் செய்துவிட்டான். அவனுக்குச் சொர்க்கம் கிடைக்கப்போகிறது. ஆனால் (ஆதி மனிதர் ஆதமுக்குச்) சிரம் பணியும்படி எனக்குக் கட்டளையிடப்பட்டது. நானோ மறுத்து விட்டேன். எனவே, எனக்கு நரகம்தான்” என்று கூறியபடி விலகிச்செல்கிறான்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (133)**

### தொழும் போது வேறு காரியங்களில் ஈடுபடக்கூடாது

தொழுதுகொண்டிருக்கும்போது திரும்பிப் பார்ப்பது குறித்து நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், “அ(வ்வாறு செய்வ)து ஓர் அடியாருடைய தொழுகையை ஷைத்தான் பறித்துச் செல்வ(தற்கு வழிவகுப்ப)தாகும்” என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (751)**

### தொழும் போது யாரையும் குறுக்கே செல்லவிடக் கூடாது

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நீங்கள் தொழுது கொண்டிருக்கும் போது உங்கள் முன்னால் எவராவது நடந்து செல்ல முனைந்தால் அவரைத் தடுங்கள். அவர் (விலகிக் கொள்ள) மறுத்தால் அப்போதும் அவரைத் தடுங்கள். அவர் (மீண்டும் விலக) மறுத்தால் அப்போது அவருடன் சண்டையி(ட்டுத் த)டுங்கள். ஏனெனில், அவன் தான் ஷைத்தான்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (3274)**

### ஸஃப்பை நெருக்கமாக்கிக்கொள்ள வேண்டும்

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : (தொழுகையில்) உங்கள் வரிசைகளை நேராக்குங்கள். நெருக்கமாக நில்லுங்கள். (உங்கள்) கழுத்துகளை நேராக அமைத்துக்கொள்ளுங்கள்.

முஹம்மதுடைய உயிர் எவனது கைவசம் உள்ளதோ அந்த இறைவனின் மீதாணையாக ஆட்டுக்குட்டிகளைப் போன்று ஷைத்தான்கள் வரிசைகளுக்கிடையில் நுழைவதை நான் காண்கிறேன்.

**அறிவிப்பவர் : அனஸ் (ரலி)**

**நூல் : நஸயீ (806)**

